

# அம்புலிமாமா

டிசம்பர் 1995



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.5.00**

**வருட சந்தா ரூ.60.00**





# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி


## குற்றங்களை இளைஞரே குறைக்க வேண்டும்!



இரண்டாவது உலகப் போருக்குப்பின் எல்லா நாடுகளிலும் குற்றங்கள் புரிவது அதிகரித்து விட்டது. இவற்றைப் புரிபவர்கள் பாதிக்கு மேல் 15 முதல் 25 வயது வரையுள்ள இளைஞர்களே.

இவர்கள் இவ்வாறு செய்யக் கூட்டுக் குடும்ப முறையை எதிர்த்துத் தனியே போய் வாழ்வது தான் காரணம். அப்படி வாழும் போது கூட்டுக் குடும்பத்திலிருக்கும் போது கிடைத்த பாதுகாப்போ அறிவுரையோ கிடைக்காமல் வெறுப்படைந்து குற்றங்களைப் புரிகிறார்கள். இது ஒரு காரணம்.

இன்னும் பல காரணங்கள் உள்ளன. இன்று எத்துறையிலும் போட்டி, கல்வி, தொழில் விளையாட்டு என்று எதை எடுத்துக் கொண்டாலும் போட்டி. இவற்றில் வெற்றி பெற முடியாதவன் தான் முன்னேற, தகாத வழிகளைப் பின் பற்றிக் குற்றங்கள் புரிந்து விடுகிறான்.



இப்படிக் குற்றங்கள் புரிபவர்கள் பெரும்பாலும் இளைஞர்களே. எனவே இவற்றைப் புரியாமல் தடுத்து நிறுத்தவும் இளைஞர்களே முன் வரவேண்டும். இளைஞர்களின் சக்தியை சமுதாயம் சிதறிப் போகும் படி விட்டுவிடக் கூடாது. இளைஞர்களை சமுக நலப் பணிகளில் ஈடுபடச் செய்து உற்சாகமளிக்க வேண்டும்.


**மதிமுகம்: 97** **டிசம்பர் 1995** **புன்னகை: 6**

**தனிப்பிரதி: ரூ.5.00** **வருட சந்தா: ரூ.60.00**




# தாய்மார்களே!
# போலியோவை ஒழிக்க
# உங்களால்தான் முடியும்.




## டிசம்பர் 9 மற்றும் ஜனவரி 20 தேதிகள் தேசிய போலியோ தடுப்பு தினங்களாக அறிவிக்கப்பட்டுள்ளது.

நீங்கள், ஏற்கனவே உங்கள் குழந்தைக்கு சொட்டு மருந்து போட்டிருந்தாலும், தற்போது குழந்தைக்கு சுகவீனம் அல்லது பேதி போன்ற வியாதிகள் கண்டு உடல் நலம் பாதிக்கப்பட்டு இருந்தாலும், பாதுகாப்பு நலன் கருதி மீண்டும் ஒரு முறை உங்கள் அருகில் உள்ள போலியோ தடுப்பு முகாம்களில் டிசம்பர் 9, ஜனவரி 20 தேதிகளில் ஐந்து வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு சொட்டு மருந்து தவறாமல் போடுங்கள்.

**ஆரோக்கியமான குழந்தைகளின் எதிர்காலம் நம் நாட்டின் எதிர்காலம்.**

**கி.பி. 2000-த்தில்
போலியோ இல்லாத
இந்தியாவை
உருவாக்குவதில்
மகிழ்ச்சியுடன்
பங்கேற்போம்.**



**PolioPlus**

## டிசம்பர் 9, 1995
## ஜனவரி 20, 1996

தேதிகளை

குறித்துக்
கொள்ளுங்கள்.
அவை உங்கள்
குழந்தைகளைப்
பாதுகாக்கும் நாட்கள்.



செய்திகளும் தகவல்களும்

# ஹாங்காங்

அண்மையில் ஹாங்காங் பற்றிப் பல செய்திகள் செய்தித் தாள்களில் வந்து கொண்டிருக்கின்றன. உலகப் படத்தைப் பார்த்தால் சீனாவின் தென்கிழக்கே ஒரு சிறு புள்ளி போல ஹாங்காங் தென்படுகிறது. 235 சிறு தீவுகளைக் கொண்ட ஹாங்காங்கின் மக்கட் தொகை 59,00,000.

இது கடந்த 155 ஆண்டுகளாக பிரிட்டிஷ் காலனியாக இருந்து வருகிறது. இதை ஆளும் மன்றத்திற்கு சென்ற செப்டம்பரில் தேர்தல் நடந்தது. ஹாங்காங் 1997ல் சீனாவோடு சேர்க்கப்படும் என்று பிரிட்டனும் சீனாவும் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளன. 16வது நூற்றாண்டில் போர்த்துக்கீசியர் இத் தீவிற்கு வந்தனர். 18வது நூற்றாண்டிற்குச் சற்று முன் ஆங்கிலேயர் முதலில் இங்கு அடியெடுத்து வைத்தார்கள். இந்தியாவிலிருந்த கிழக்கிந்திய ஆங்கிலேய கம்பெனி சீனாவுடன் வியாபாரம் செய்ய ஒப்பந்தம் செய்து கொண்டது. கஞ்சா வியாபாரத்தில் இவ்விருவருக்குமிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டுப் போர் மூண்டது. முடிவில் 1841ல் சீனா ஹாங்காங்கை பிரிட்டிஷாரிடம் ஒப்படைத்தது. 1898ன் ஒப்பந்தப்படி பிரிட்டனுக்கு இது 99 ஆண்டுகளுக்குக் குத்தகைக்கு விடப்பட்டது.

இரு நாடுகளும் 1984ல் செய்து கொண்ட ஒப்பந்தப்படி 1997 ஜூலை முதல் தேதியிலிருந்து ஹாங்காங் சீனாவோடு சேர்க்கப்படும் என்று தீர்மானிக்கப்பட்டது. கடந்த ஐம்பது ஆண்டுகளில் ஹாங்காங் மின்துறையிலும், மின் சாதனங்களைத் தயாரிப்பதிலும், ப்ளாஸ்டிக், பீங்கான் பொருள்களைத் தயாரிப்பதிலும் மிகவும் முன்னேறி விட்டது. தென் கொரியா, சிங்கப்பூர், டைவான், ஹாங்காங் ஆகிய நாடுகளை ஆசியாவின் புலிகள் என்று குறிப்பிடுகிறார்கள்.

அண்மையில் நடந்த ஆளும் மன்றத் தேர்தலில் சீனாவைக் கடுமையாக எதிர்க்கும் டெமக்ரடிக் கட்சிக்குப் பெரும்பான்மை இடங்கள் கிடைக்க அது ஆட்சிக்கு வந்துள்ளது. சீனாவை ஆதரிக்கும் 'டெமக்ரடிக் அல்லயன்ஸால்' ஆட்சியைக் கைப்பற்ற முடியவில்லை. இது சீனாவுக்கு எச்சரிக்கை விடுப்பது போலாகும்.

1984 ஒப்பந்தப்படி சீனா 50 ஆண்டுகளுக்காவது ஹாங்காங்கின் பொருளாதார, வியாபார, குடிமகன் உரிமைகளில் தலையிடக் கூடாது. அதாவது ஹாங்காங் சீனாவில் சேர்ந்தாலும் சீனச் சட்டமல்லாமல் அதற்குத் தனிச் சட்டங்கள் இருக்கும்.

பிரிட்டன் ஹாங்காங் மக்களை சீனாவுக்கு எதிராகத் தூண்டி வருகிறது என்று சீனா இப்போது குற்றம் சாட்டி வருகிறது. இந்த நிலை நீடிக்குமானால் 1997க்குப் பின் தேர்தல் முடிவை ரத்து செய்யப் போவதாக சீனா மிரட்டுகிறது.

இந்த நிலையில் ஹாங்காங் சீனாவுடன் சேருமா என்ற சந்தேகம் எழுந்துள்ளது. ஒரு வேளை அது தன்னை ஒரு சுதந்திர நாடாகவும் பிரகடனம் செய்து கொண்டு விடலாம். இது எப்படி முடியும் என்று இன்னும் இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகுதான் தெரியும்.





# எதிர்பாராத பரிசு

மங்களபுரி இளவரசி மாதங்கி அழகானவள். நன்கு வளர்ந்துவிட்ட போதிலும் குழந்தைத்தனம் அவளை விட்டுப் போகவில்லை. அதுமட்டுமல்ல எதற்கும் அவசரப்படுபவள். தாய் தந்தையரிடம் கோவிலுக்குப் போவதாகக் கூறிக் காடுகளில் போய் இஷ்டப்பட்டபடி திரிந்து விட்டு வருவாள். இதற்கு துணை போகிறவள் அவளது தோழி விமலா.

காட்டில் திரியும் போது அவர்கள் ஒரு குன்றின் மீது பழங்காலக் கோட்டை இருப்பதைக் காண்பது உண்டு. அப்போது மாதங்கி தன் தோழியிடம் ''ஒரு நாள் அந்தக் கோட்டைக்குள் போய் என்ன இருக்கிறது என்று பார்க்க வேண்டும் நாம் பல முறை இங்கு வந்தும் அக்கோட்டையைப் பற்றி எதுவும் அறிய முடியவில்லை. அதில் யார் இருக்கிறார், என்ன அதிசயப் பொருள்கள் இருக்கின்றன என்பதை எல்லாம் அதற்குள் போய் பார்க்கவேண்டும்'' என்று கூறி வந்தாள். விமலாவோ ''வேண்டாம். அங்கே போகாதீர்கள். அதில் என்ன இருக்குமோ, யார் இருப்பார்களோ? அங்கு போனால் ஏதாவது ஆபத்தும் வரலாம்'' என்று சொல்லித் தடுத்து வந்தாள்.

தம் மகளுக்கு விவாக வயது வந்து விட்டதால் அவளை சொர்ணகிரி இளவரசன் சூரசேனனுக்குத் திருமணம் செய்து வைக்க அவளது பெற்றோர்கள் தீர்மானித்தார்கள். ஆனால் மாதங்கிக்கு இத் திருமணத்தில் சற்றும் இஷ்டம் இல்லை. அவள் அதைத் தன் பெற்றோரிடம் கூறி ''அந்த சூரசேனனிடம் என்ன சிறப்பு அம்சம் உள்ளது?'' என்று கேட்டாள்.

அவர்களும் ''சூரசேனன் குருகுல வாசம் செய்து நன்கு கல்வி கற்றவன். அவன் சொர்ணகிரியின் வருங்கால

—கி. அருணா—

மன்னன்'' என்றனர். அவளும் ''இது எல்லா அரசகுமாரர்களிடமும் இருப்பதே. ஆனால் அவனுக்குள்ள சிறப்பு அம்சம் என்ன? நான் கேட்கும் மூன்று கேள்விகளுக்குச் சரியான பதில்களைக் கூறுபவனையோ, நீரிலோ நெருப்பிலோ நடந்து காட்டும் சக்தி பெற்றவனையோ அல்லது ஆகாயத்தில் பறந்து காட்டுபவனையோ நான் மணக்கத் தயார். இவையெல்லாம் சிறப்பான அம்சங்களே'' என்றாள்.

அதைக் கேட்ட அரச தம்பதிகள் ''என்ன உளறுகிறாய்? அதெல்லாம் எங்களுக்குத் தெரியாது. உன்னை சூரசேனனுக்கு விவாகம் செய்து கொடுப்பதாகத் தீர்மானித்து விட்டோம்'' என்றனர். அதுமட்டுமல்ல, அவர்கள் சூரசேனனைத் தம் நாட்டிற்கு வரச் சொல்லி ஒரு மாளிகையில் எல்லா வசதிகளுடன்தங்க வைத்தனர். மாதங்கியை அவனுக்கு அன்றைக்கு இரண்டாவது நாள் விவாகம் செய்து வைக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன.

ஆனால் திடீரென அரசகுமாரி மாதங்கி காணாமல் போய் விட்டாள். அவளைத் தேடிக் கண்டுபிடிக்க நான்கு திசைகளிலும் வீரர்களை மன்னன் அனுப்பினான். ஆனால் விமலாவுக்கு மட்டும் மாதங்கி காட்டிற்குள்ளிருந்த பழங்கால கோட்டைக்குள் தான் போயிருப்பாள் என்ற எண்ணம் தோன்றியது. எனவே முகூர்த்த வேளைக்கு அவளை பத்திரமாக அழைத்து வந்துவிட வேண்டியது தன் கடமை என நினைத்து அவள் யாரிடமும் சொல்லாமல் காட்டிலுள்ள கோட்டையை நோக்கிச் சென்றாள்.



அவள் கோட்டையை அடைந்த போது மாலையாகி விட்டது. அக்கோட்டையின் கதவு மூடப்பட்டிருந்தது. அக்கதவிலுள்ள ஓட்டை வழியாக உள்ளே என்ன இருக்கிறது என்று பார்த்தாள்.

கோட்டைக்குள் இருந்த குளத்தின் கரையில் ஒரு விகாரமான மனிதன் உட்கார்ந்து கொண்டு ஒரு தூண்டிலை அதில் போட்டுக் கொண்டிருந்தான். அவன் இடுப்பு வில் போல வளைந்திருந்தது. ஆட்டு தாடி, முட்டைக் கண், கருத்த உடல், கிழிந்த சட்டையை



அணிந்திருந்தான். அவனருகே மாதங்கி கண்ணீர்வடித்தவாறே நின்று கொண்டிருந்தாள்.

ஆட்டுத் தாடிக்காரன் அவளிடம் ''பெண்ணே! என்னை மரியாதையாக மணம் செய்து கொண்டு விடு. இல்லா விட்டால் உன்னை மீனாக மாற்றி விடுவேன். பிறகு நீ எனக்கு உணவாக வேண்டியதுதான்'' என்றான்.

மாதங்கியோ ''நான் சொர்ணகிரி இளவரசனின் மனைவி ஆக வேண்டி யவள். இந்தக் கோட்டைக்குள் ஏதோ அதிசயம் பொருள் இருக்குமென்று நினைத்து இதற்குள் வந்தேன். ஆனால் இப்படிப்பட்ட ஒரு ஆபத்து இருக்கும் என்று நினைக்கவில்லை. மூளை இல்லாமல் இங்கே வந்து மாட்டிக் கொண்டு விட்டேன். கிழவனான உன்னையா நான் கல்யாணம் செய்து கொள்வேன்?'' என்றாள் வெறுப் போடு.

ஆட்டு தாடிக்காரனோ ''வீண் பேச்சு வேண்டாம். இன்னும் இரண்டு நாள் அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள் உன் முடிவைச் சொல்ல வேண்டும்'' எனக் கூறி தன் கையி லிருந்த தூண்டிலால் அவள் தலையில் ஒரு தட்டு தட்டினான். மறுநிமிடமே மாதங்கி ஒரு மீனாக மாறித் தரையில் உருண்டு விழுந்தாள். ஆட்டுத் தாடிக் காரன் அந்த மீனை எடுத்து தன் பக் கத்தில் இருந்த தண்ணீர்ப் பானையில் போட்டு மூடினான்.

அப்போது இருட்டலாயிற்று. அவன் ஒரு தீப்பந்தத்தை ஏற்றினான். இதை எல்லாம் பார்த்த விமலா அக் கோட்டைக்கதவைப் பலமாகத் தட்டி னாள். ஆட்டு தாடிக்காரன் ''யாரது?'' என்று கேட்டவாறே கதவைத் திறந் தான்.

விமலா பயந்தவள் போல ''நான் இக்காட்டு வழியே வந்தேன். இர வாகி விட்டது. இரவில் இங்கே தங்கி விட்டு நாளை நான் போகலாமா, மாமா'' என்று கேட்டாள். அதுகேட்டு அவன் ''என்னைப் பார்த்து யாருமே பயந்து ஓடி விடுவார்கள். நீயோ என்னை மாமா என்று அழைத்ததோடு தங்க இடமும் கேட்கிறாய்! அழகான பெண் வந்து இடம் கேட்டால் நான் மறுத்து விடுவேனா? வா உள்ளே''

என்றான்.

அவள் உள்ளே வந்ததும் அவன் கதவை மூடி "இரு. உன் அழகைப் பார்க்க இந்த ஒரு தீப்பந்தம் போதாது! இன்னொன்றை ஏற்றி எடுத்து வருகிறேன். அப்போது நிறைய வெளிச்சம் இருக்கும். அந்த வெளிச்சத்தில் உன் அழகை இன்னமும் ரசிப்பேன்." என்று கூறிச் சற்று தூரத்திலுள்ள ஒரு அறைக்குள் சென்றான்.

அவள் உடனே தண்ணீர்ப் பானைக் கருகே போய் அதன் மூடியைத் திறந்து அதிலிருந்த மீனிடம் "இளவரசியே! உன்னைக் காப்பாற்ற வந்திருக்கிறேன். பயப்படாதே" எனக் கூறினாள். அப்போது ஆட்டு தாடிக்காரன் வருவதைக் கண்டு விமலா சட்டெனத் தண்ணீர் பானையை மூடிவிட்டு முன் இருந்த இடத்திற்குப் போய் நின்றாள்.

தாடிக்காரன் வந்ததும் அவள் " நீ இவ்வளவு வயதாகியும் மிக அழகான இருக்கிறாயே! நீ இளைஞனாக இருந்த போது எப்படி இருந்திருப்பாய்? இப்போது உன் வயது தொண்ணூறு என்றால் எழுபது வருடங்களுக்கு முன் நீ மிக மிக அழகாகத்தான் இருந்திருப்பாய்" என்று புகழ்ந்து கூறினாள். அப்போது அவன் "நான் இப்போதும் அழகாக இருக்கிறேனா? அப்படியானால் நீ என்னை மணந்து கொள்கிறாயா?" என்ற ஆவலுடன் கேட்டான். விமலாவும் "ஓ! தாரளமாக மணந்து கொள்கிறேன் மாமா! இங்கே திருடர் பயம் இல்லையே?"



என்று பயந்தவள் போலக் கேட்டாள்.

அவனோ "திருடன் இந்தக் கோட்டைக்குள் நுழைய முடியுமா? என் சக்தி எவ்வளவு தெரியுமா? நினைத்தால் இந்தக் கோட்டையை ஆகாயத்தில் பறக்க வைத்து வெகு தூரத்தில் போய் இறங்கச் செய்வேன். எனக்குள்ள மந்திர சக்தி உனக்குத் தெரியாதுதான்" என்றான். பிறகு அவன் "நீ ஏன் திருடர் பயம் பற்றிக் கேட்கிறாய்? உன்னிடம் ஏதாவது விலையுயர்ந்த பொருள் ஏதாவது இருக்கிறதா?" என்று கேட்டான்.

விமலாவும் தன் கை விரலிலுள்ள மோதிரத்தைக் காட்டி "மாமா! இது சாதாரண வைர மோதிரம் அல்ல. மிகவும் சக்தி வாய்ந்தது. ஒரு நாளிரவு



ஒரு யோகி எங்கள் வீட்டிற்கு வந்த போது எங்களை ஆசீர்வதித்து இதைக் கொடுத்து விட்டுப் போனார். இதை அணிந்திருப்பவர் தம் முன் நிற்பவரைத் தாம் விரும்பியதைச் செய்யச் செய்வார். ஒரு மனிதனின் மனதை மாற் றும் சக்தி இதற்கு உண்டு'' என்றாள்.

அதுகேட்டு அந்த ஆட்டு தாடிக்காரன் அவளது விரலிலிருந்த மோதிரத்தையே பார்த்து நின்றான். பிறகு அவன் ''என் மனம் நீண்ட நாளாகவே நான் ஒரு நாட்டின் மன்னனாக ஆக வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அதற்கு வழி இந்நாட்டின் இளவரசியை மணப்பது தான். அவள் இந்நாட்டு மன்னனின் ஒரே மகள். அரசனுக்கு ஆண் சந்ததி இல்லை. அதனால் இந்த அரசகுமாரியை மணப்பவன் இந்நாட்டின் அரசனாகலாம். இப்போது இந்நாட்டு அரசகுமாரி என்னிடம் அகப்பட்டு மீனாக இந்தத் தண்ணீர்ப் பானைக்குள் இருக்கிறாள். நீ உன் மோதிரத்தின் சக்தியால் அவள் மனதை மாற்றி என்னை மணந்து கொள்ளும்படிச் செய்'' என்று கூறி தூண்டிலால் பானைக்குள்ளிருந்த மீனைத் தொட்டான்.

மறுவிநாடி மாதங்கி தன் பழைய உருவில் பானையிலிருந்து வெளியே வந்தாள். விமலா தன் மோதிரத்தை அவள் கண்களுக்கு எதிரே காட்டி ''சூ... ஆகா! இவள் அரசகுமாரியே. என் மாமா பார்க்க இப்படி இருந்தாலும் மிகவும் நல்லவர். இளவரசியே! உனக்கு இவரை மணக்கச் சம்மதம் தானே'' என்று கேட்டுக் கண் சிமிட்டினாள்.

இளவரசியும் ''சம்மதிக்கிறேன்'' என்றாள். எனவே அதைக் கேட்ட தாடிக்காரன் ''என் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்'' என்று துள்ளிக் குதித்தான். அப்போது கால் இடறி அவன் விழவே அவன் கையிலிருந்த தூண்டில் தனியே போய் விழுந்தது. விமலா சட்டென அதை எடுத்து ஆட்டு தாடிக்காரனின் தலையை அதால் தட்டினாள்.

மறுநிமிடமே அவன் ஒரு மீனாக மாறிப் போனான். விமலா அந்த மீனை உதைக்கவே அது குளத்தில்

போய் விழுந்தது. அதுகண்டு மாதங்கி விமலாவைக் கட்டித் தழுவிக் கொண்டு ''என்னை எவ்வளவு சுலப மாகக் காப்பாற்றி விட்டாய்!'' என்று ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். விமலா விடம் ''சரி. இப்போதே கிளம்பு. நாம் தலைநகருக்குப் போகலாம். உன் திரு மணத்திற்கு நீ சற்றும் எண்ணியிராத ஒரு பரிசை அளிக்கப் போகிறேன்'' என்றாள்.

விமலாவும் மாதங்கியும் வருவது கண்டு மன்னனும் அரசியும் மகிழ்ச்சி யும் ஆச்சரியமும் அடைந்தார்கள். சூர சேனனும் அவர்களைக் கண்டு பிர மித்து நின்றான். அப்போது மாதங்கி அவர்களிடம் நடந்ததை எல்லாம் கூறி ''நான் பைத்தியக்காரத்தனமாக என்னை மணப்பவரிடம் ஏதாவது ஒரு சிறப்பு அம்சம் இருக்க வேண்டும் என எண்ணியதால் இத்தகைய ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டு விட்டேன். நான் இப்போது நீங்கள் தேர்ந்தெடுத்த இந்த அரசகுமாரரையே மணக்கச் சம்மதிக்கிறேன்'' என்று தன் பெற்றோ ரிடம் கூறினாள்.

அதுவரை விமலாவையே உற்றுப் பார்த்துப் கொண்டிருந்த சூரசேனன் மாதங்கியைப் பார்த்து ''என்னை மன்னித்து விடு. நான் உன்னை மணக் காமல் உன் தோழி விமலாவை மணந்து கொள்கிறேன். ஏனெனில் அவளிடம் ஒரு சிறப்பு அம்சம் இருப்ப தைக் காண்கிறேன்'' என்றான்.

அதைக் கேட்ட விமலா திகைத்துப் போனாள். மாதங்கியும் ஆச்சரியப் பட்டாளாயினும் சட்டென ''இது சரி யான முடிவே. நான் விமலாவிடம் அவளது திருமணத்தின் போது அவள் சற்றும் எதிர்பாராத ஒரு பரிசை அளிப் பதாகக் கூறி இருந்தேன். அந்தப் பரிசு விமலாவுக்கு இந்தத் திருமணம்தான். எனக்கு என் பெற்றோர் வேறொரு அரசகுமாரரைத் தேர்ந்தெடுப்பார் கள்'' என்றாள்.

மாதங்கி கூறியபடி அவளது பெற் றோர் விமலாவுக்கும் சூரசேனனுக் கும் மிகச் சிறப்பாகத் திருமணத்தைச் செய்து வைத்தார்கள்.



# உதவியது ஏனோ?

ஆறுமுகம் தன் ஊரிலிருந்து தன் இரட்டை மாட்டு வண்டியில் பூசணிக் காய்களை ஏற்றிக் கொண்டு ஈரோடு சந்தையில் விற்கப் போய்க் கொண்டிருந்தான். வழியில் பாசூரைத் தாண்டியதும் நடுவழியில் ஒரு பெரிய பாறாங்கல் இருந்தது. வண்டியிலிருந்து இறங்கி அதனை நகர்த்திப் பார்த்தான். அவனால் முடியவில்லை.

சற்று தூரத்தில் படுத்திருந்த ஒருவனைக் கண்டு அவனருகே போய் ''ஐயா! எந்தப் படுபாவியோ நடு ரோடில் ஒரு பெரிய பாறாங்கல்லை வைத்திருக்கிறான்! என் வண்டி ஈரோடு போக வேண்டுமானால் அதை நகர்த்தியே ஆக வேண்டும். நீங்கள் வந்து உதவினால் அந்தக் கல்லை நகர்த்திப் பாதை ஓரமாகத் தள்ளி விடலாம்'' என்றான்.

அந்த மனிதனும் எழுந்து வரவே இருவருமாகச் சேர்ந்து அக்கல்லைப் புரட்டி ஓரமாகத் தள்ளினார்கள். ஆறுமுகம் ''நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்கவே அம்மனிதனும் ''சாவடிப்பாளையம் போக வேண்டும்'' என்றான். ஆறுமுகமும் ''அது ஈரோடு போகும் வழியில்தான் உள்ளது. வண்டியில் ஏறிக் கொள்ளுங்கள்'' என்றான். அவனும் ஏறிக் கொள்ள வண்டியும் சென்றது.

சாவடிப்பாளையம் வந்ததும் அந்த மனிதன் வண்டியிலிருந்து கீழே இறங்கி ''மிக்க நன்றி. நான் இந்த ஊருக்கு வரவே அந்தப் பாறாங்கல்லை நடு ரோட்டில் வைத்தேன். உங்களுக்கு என் உதவி கண்டிப்பாக வேண்டும் என்று எனக்குத் தெரியும். அதனால்தான் உதவினேன்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னான்.






# 4

(ரூபதரன் பல இன்னல்களை அனுபவித்து பல கப்பல்களையும் ஆட்களையும் இழந்து சுகேசினி என்ற தேவதை வசிக்கும் தீவை அடைந்தான். அங்கு தன் ஆட்களை இருபிரிவுகளாகப் பிரித்து ஒரு பிரிவிற்கு மாயாவியைத் தலைவனாக்கி அப்பிரிவை சுகேசினியின் இல்லத்திற்கு அனுப்பினான். அங்கு சுகேசினி தன் மாய மந்திரத்தால் மாயாவியின் ஆட்களை பன்றிகளாக மாற்றி விட்டாள். ஆனால் ரூபதரன் அவர்களை விடுவித்து அவளுடன் நட்புறவு கொண்டான். அதன் பிறகு-)

சுகேசினி கூறியபடி தன் ஆட்கள் இருந்த கப்பலை ரூபதரன் அடைந்தான். அவர்கள் எல்லோரும் கவலையுடன் உட்கார்ந்திருந்தார்கள். ரூபதரன் வருவதைக் கண்டதும் அவர்களடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அவனைச்சூழ்ந்து கொண்டு ''நம் ஆட்களெல்லாம் எங்கே?'' என்று கேட்டார்கள்.

அவர்கள் மாயாவி திரும்பி வந்து சுகேசினியின் வீட்டில் நடந்ததைக் கேட்டு மிகவும் வருந்தினார்கள். தம் நண்பர்களெல்லாம் பன்றிகளாக மாறி விட்டார்களா என்று எண்ணிக் கண் கலங்கினர். ஆனால் ரூபதரன் சிரித்துக் கொண்டே வருவது கண்டு அவன் ஏதோ நற்செய்தி கூறப் போகிறான் என்று எண்ணி மகிழ்ந்தார்கள்.

ரூபதரனும் ''நம் ஆட்களெல்லாம் சுகேசினியின் வீட்டில் பத்திரமாக



இருக்கிறார்கள். நன்றாகச்சாப்பிட்டுக் குடித்து மகிழ்ந்து கொண்டிருக்கிறார்கள். நம் கப்பலை ஓரிடத்தில் கட்டி விட்டு நாம் சாமான்களை எல்லாம் ஒரு குகைக்குள் பத்திரமாக வைக்க வேண்டும். இதன் பிறகு நான் உங்களை சுகேசினியின் வீட்டிற்கு அழைத்துச் செல்வேன்'' என்றான்.

உடனே எல்லோரும் ரூபதரன் சொன்னபடி செய்யத் தயாரானார்கள். அப்போது மாயாவி ''நீங்கள் சுகேசினி வீட்டிற்கா போகப் போகிறீர்கள்? அவள் உங்களை எல்லாம் ஏதாவது ஒரு மிருகமாக மாற்றி விடுவாள். ஒற்றைக் கண் ராட்சஸன் குகைக்குள் இவனோடு போனவர்களின் கதி என்ன ஆயிற்று? எனவே இவன் சொல்கிறபடி நடக்காதீர்கள்'' என்றான்.

இதைக் கேட்டுப் பலர் பலமாகச் சிரித்தார்கள். சிலர் மட்டும் ஏதோ யோசனையில் ஆழ்ந்தார்கள். ஒருவனோ ''மாயாவி! நீ சூரப்புலிதான். இங்கிருந்து ஆட்களை அழைத்துக் கொண்டு போய் அவர்கள் பன்றிகளாக மாறும் வரை பார்த்துக் கொண்டிருந்து விட்டு எதுவுமே செய்ய முடியாமல் திரும்பி வந்து விட்டாயே. உன்னைப் எப்படித்தான் பாராட்டுவது?'' என்று கிண்டல் செய்தான்.

இதைக் கேட்ட ரூபதரனுக்குக் கோபம் வந்து விட்டது. அவன் வாளை உருவிக் கொண்டு மாயாவியை வெட்டிக் கொல்லப் போனான். ஆனால் மற்றவர்கள் அவனைத் தடுத்தனர். அவர்கள் ''இவன் வராவிட்டால் இவனைக் கப்பலுக்குக்காவலாக வைத்து விட்டு நாம் போகலாம்'' என்றார்கள். ரூபதரன் அவர்களை அழைத்துக் கொண்டு செல்லவே மாயாவியும் அவர்களோடு சென்றான்.

சுகேசினி அவர்களை எல்லாம் வரவேற்றுக் குளிக்கச் சொல்லி புத்தாடைகள் கொடுத்தாள். அவர்கள் தம் நண்பர்களையும் கண்டு மகிழ்ந்தனர். சுகேசினியும் ரூபதரனிடம் ''நீங்களெல்லாம் இதுவரை பட்ட கஷ்டங்களை மறந்து போங்கள். இனி கவலைப் படாது சாப்பிட்டு சந்தோஷமாகக் காலத்தைக் கழியுங்கள்'' என்றாள்.

அதைக் கேட்டு ரூபதரனின் ஆட்கள் மகிழ்ந்தார்கள். அவ்வளவு நாட்களாகப்பட்ட கஷ்டங்கள் இனி இல்லை என எண்ணி மகிழ்ந்து அவர்கள் சுகேசினியின் அழைப்பை ஏற்றார்கள். அங்கே சிறிது காலம் தங்கப் போவதாகவும் அவர்கள் கூறினார்கள்.

ரூபதரனும் அவள் கூறியபடியே அங்கே தன் ஆட்களுடன் ஒரு வருட காலம் இருந்து விட்டான். ஓராண்டு முடிந்ததும் அவனுடைய ஆட்களெல்லோரும் ''நாம் எவ்வளவு காலம்தான் இங்கு இருக்கப் போகிறோம்? நம் நாட்டிற்குப் போக வேண்டாமா?'' என்று ரூபதரனிடம் கேட்டார்கள்.

ரூபதரனும் சுகேசினியிடம் ''என் ஆட்களெல்லாம் தாய் நாட்டிற்குச் செல்ல விரும்புகிறார்கள். நானும் இங்கிருந்து புறப்படுவதே நல்லது என நினைக்கிறேன். எங்கள் பயணத்திற்கு நீ உதவ வேண்டும்'' என்றான்.

அவளும் ''உங்களையெல்லாம் கட்டாயப்படுத்தி இங்கே இருக்க வைக்கவும் நான் விரும்பவில்லை. ஆனால் நீ உன் நாட்டிற்குப் போகு முன் இன்னொரு பயணத்தை மேற்கொள்ள வேண்டும். எமன் முதலானோர் இருக்கும் நரகலோகத்திற்குச் செல்ல வேண்டும். அங்கு சாங்கேதகன் என்ற பேரறிஞன் இருக்கிறான். இறந்து போயும் கூட அவன் அறிவு குன்றி விடவில்லை. அவனை நீ சந்தித்து அவனது அறிவுரையை ஏற்க



வேண்டும்'' என்றாள்.

அதைக் கேட்ட ரூபதரன் உற்சாகம் இழந்தவனாய் ''ஐயோ! நரகலோகம் போக என்னால் முடியுமா? யாராவது கப்பலில் நரகலோகத்திற்குப் போயிருக்கிறார்களா?'' என்று கேட்டான். சுகேசினியும் ''நீ கப்பலை ஓட்டிக் கொண்டு அங்கு செல்ல வேண்டும் என்ற அவசியமே இல்லை. கப்பல் பாய்களை விரித்துவிட்டு நீ கப்பலில் உட்கார்ந்திரு. வட காற்று உன் கப்பலை நேராக நரகலோகத்திற்குக் கொண்டு போய் விட்டுவிடும். உன் கப்பலை அங்கே கரையில் கட்டு. பின் நடந்தே எமலோகத்திற்குள் செல். கொஞ்ச தூரம் போனதும் நீ ஒரு சிறு குன்றைக் காண்பாய். அதனருகே



என்று விவரமாகக் கூறினாள்.

இதற்குள் விடிந்து விட்டது. ரூப தரன் தன் ஆட்களை எழுப்பி ''எழுந் திருங்கள். நாம் இங்கிருந்து வேறொரு இடத்திற்குச் செல்ல வேண்டும். சுகேசினி அது பற்றிக் கூறி இருக் கிறாள்'' என்றாள். அவர்களும் இனி தாய் நாடு போய்ச் சேர்ந்து விடுவோம் என்று எண்ணி மகிழ்ந்தார்கள்.

ஆனால் ரூபதரன் அவர்களிடம் ''நாம் இப்போது உடனடியாக இதா காவிற்கு போக முடியாது. அங்கே போனால் நமக்குப் பல கடினமான பிரச்னைகளை எதிர்நோக்க வேண்டி வரும். அப்பிரச்னைகளை எதிர்த்துச் சமாளிக்கவே நாம் நரகலோகம் போகி றோம். அங்குள்ள ஒரு பேரறிஞரை நாம் சந்தித்து அவர் கூறும் அறிவுரை களை ஏற்று நடந்தால் நமக்கு எந்த சிரமமும் இராது'' என்றதும் அவர்கள் மனம் ஒடிந்து போயிற்று ஆனால் என்ன செய்வது? ரூபதரன் சொல்கிற படி நடந்துதானே ஆக வேண்டும்?

வைதரணி நதி ஓடுகிறது. அந்தக் குன்ற ருகே மூன்றடி நீளமும் மூன்றடி அகல மும் கொண்ட ஒரு குழி தோண்டு. அதில் உன் பித்ரு தேவர்களுக்குத் தர்ப் பணம் செய். உன்னை பத்திரமாக இதாகா கொண்டு போய்ச் சேர்க்க அவர்களிடம் வேண்டிக் கொள். இதா காவை அடைந்ததும் அவர்களுக்கு பலி கொடுப்பதாக நீ வாக்களி. சாங் கேதகனுக்கும் ஒரு கருப்பு ஆட்டை பலியிட்டு நெருப்பில் வாட்டு. பிறகு எமதர்மனுக்கும் நரகலோகவாசி களுக்கும் வணக்கம் செலுத்தி பித்ரு தேவதைகள் வருவதைப் பார். அவர் களோடு சாங்கேதகனும் இருப்பான். அவன் உனக்கு இதாகா செல்வதற் கான வழி முறைகளைக் கூறுவான்.''

அவர்கள் எல்லோரும் கப்பலை அடைந்த போது சுகேசினியும் அங்கு வந்திருப்பதைக் கண்டார்கள். அவள் அங்கு இரு ஆடுகளை அங்கு விட்டு விட்டு யாரிடமும் எதுவும் பேசாமல் போய் விட்டாள்.

ரூபதரனின் ஆட்கள் கப்பலை இழுத்து வந்து பாய் மரத்தில் பாய் களைக் கட்டினார்கள். இரு ஆடுகளை எடுத்துக் கொண்டு எல்லோரும் கப்ப லுக்குள் சென்றார்கள். சுகேசினியின்

உதவியால் வடகாற்று அடிக்கவே கப்பல் நகர்ந்து கடலில் சென்றது. அது எவ்வித இடையூறுமின்றி பகல் முழுவதும் கடலில் சென்றது. இருட்டிய பின் ஒரு கரையை அடைந்தது.

ரூபதரன் சுகேசினி கூறியபடியே கரை இறங்கி நடந்து சென்றான். அவன் வைதரிணி நதிக் கரையில் சுகேசினி கூறியபடி குழியைத் தோண்டினான். அதில் பித்ரு தேவதைகளுக்குப் தர்ப்பணம் விட்டான். பித்ரு தேவதைகளை அவன் பிரார்த்தித்து பலிகளையும் கொடுத்தான்.

அத் தேவதைகளும் மகிழ்ந்து அந்த பலியை ஏற்க கும்பலாக வந்தார்கள். ரூபதரன் எமனையும் மற்றவர்களையும் வணங்கி பித்ரு தேவதைகளிடம் ''நான் சாங்கேதகனிடம் சில கேள்விகளைக் கேட்க வேண்டும். அவற்றிற்கு விடைகளை அறியும் வரை நீங்கள் காத்திருக்க வேண்டுகிறேன்'' என்றான்.

அது கேட்டு பித்ரு தேவதைகளும் அவன் இட்ட பலியைத் தொடாமல் நின்றன. ரூபதரனும் சாங்கேதகன் அக்கூட்டத்தில் இருக்கிறானா என்று பார்க்கலானான். அவனை அவன் அவர்களில் காணவில்லை.

அப்போது எல்லோரையும் தள்ளிக் கொண்டு ஒரு பெண் மணி முன்னதாக வந்து ரூபதரனின் எதிரே நின்றாள். அவளைக் கண்டு அவன் திடுக்கிட்டான். ஏனெனில் அவள் அவனது தாயாரே. ரூபதரன் ட்ராய்ப் போருக்குக் கிளம்பிய போது அவள் உயிருடன்தான் இருந்தாள். அவள் இறந்து விட்டாள் என்பது அப்போதுதான் ரூபதரனுக்குத் தெரிந்தது.



தாயாரைப் பார்த்ததும் அவனது கண்களில் நீர் நிறைந்து விட்டது. அவன் தன் துக்கத்தை அடக்கிக் கொண்டு சாங்கேதகன் எங்கே என்று பார்த்தான். அவன் கையில் தங்கக் கோலுடன் வந்தான். அவன் ரூபதரனை அடையாளம் கண்டு கொண்டு ''நீ ஏனப்பா இந்த லோகத்திற்கு வந்தாய்? உனக்கு என் உதவி தேவைப்படுகிறதா?'' என்று கேட்டான்.

ரூபதரன் சுகேசினி கூறியபடி அவனுக்கு பலியிடவே, அவனும் மகிழ்ந்து ''நீ உன் தாய் நாட்டை



அடைய வேண்டுமென்று துடிக்கி றாய். ஆம், தாய் நாட்டை விட சொர்க் கம் உயர்ந்தல்லவே. ஆனால் தேவதை கள் உன் மீது கோபம் கொண்டிருக் கிறார்கள். அதனால் பல கஷ்டங் களைப் பட்டாலும் நீ க்ஷேமமாகவே உன் தாய் நாட்டை அடைவாய். நீ தாய் நாடு திரும்பும் வழியில் திரிநாசி என்ற தீவை அடைவாய். அங்கு சூரியதேவ னின் பசுக்கூட்டம் இருக்கும். அந்த மிருகங்களுக்கு நீங்கள் எவ்விதத் தீங் கும் இழைக்கக் கூடாது. அப்படி ஏதா வது தீங்கிழைத்தால் நீ உன் ஆட்களை இழந்து விடுவாய். நீ மட்டும் உயிர் தப்பி வேறொரு கப்பலில் ஏறி உன் தாய் நாட்டை அடைவாய். அப்போ தும் உன் கஷ்டங்கள் தீர்ந்து விடாது. உன் வீட்டில் எதிரிகள் இருந்து தம்மில் ஒருவரை உன் மனைவி மணக்க வேண்டுமென்று அவளைக் கட்டா யப்படுத்து வார்கள். ஆனால் நீ அந்த எதிரிகளை எல்லாம் கொன்று விடு வாய். அதன் பிறகு நீ தேவதைகளைத் திருப்தி செய். பலிகளைக் கொடு. இதன் பிறகு நீண்ட காலம் நீ க்ஷேம மாக வாழ்வாய். உனக்கு மரணமும் கடலில்தான். அதுவும் கவலையில் லாமல் சிரமப்படாமல் ஏற்படும். அச் சமயம் உனக்கு வேண்டியவர்களெல் லாம் உன்னைச் சுற்றிலும் இருப்பார் கள்'' என்று கூறினான்.

ரூபதரனும் ''சரி. நடப்பது நடக் கட்டும். ஒன்று மட்டும் கேட்கிறேன். என் தாயார் இங்கு என்னைப் பார்த் தும் ஏன் பேசாமல் நிற்கிறாள்?'' என்று கேட்டான். சாங்கேதகனும் ''நீ கொடுத்த பலியை ஏற்ற பிறகே உன்னிடம் பேசுவாள்'' எனக் கூறி விட்டு எமலோகத்திற்குச் சென்று விட்டான்.

ரூபதரன் தன் தாய் பலியை ஏற்கும் வரை அங்கேயே காத்து நின்றான். அவள் பலியை ஏற்ற பின் தலை நிமிர்ந்து பார்த்து தன் மகனைக் கண்டு ''நீ இந்த உலகத்திற்கு எப்படி வந் தாய்? இது உயிருள்ள மனிதனால் முடியாதே. ட்ராயிலிருந்து இதாகா சென்று உன் மனைவியைப் பார்த் தாயா?'' என்று கேட்டாள்.

அவனும் ''இல்லை அம்மா! நான் இதாகாவை அடைய முடியாமல்

கஷ்டங்கள் பட்டுக் கொண்டிருக் கிறேன். சாங்கேதகனின் யோசனை களையும் அறிவுரைகளையும் பெறவே நான் இங்கு வர வேண்டிய தாயிற்று நீ எப்படியம்மா இறந்து போனாய்? ஏதாவது நோயாலா அல் லது திடீரென மரணம் ஏற்பட்டதா? தகப்பனார் எப்படி இருக்கிறார்? என் மகன் எப்படி இருக்கிறான்? என்னை அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டி ருக்கிறார்களா? என் மனைவியின் நிலை என்ன? நான் வரமாட்டேனென எண்ணி வேறு யாரையாவது மணந்து கொண்டு விட்டாளா?'' என்று கேட் டான்.

அவன் தாயாரும் ''உன் மனைவி பொறுமையுடன் வீட்டில்தான் இருக் கிறாள். உன் சொத்தெல்லாம் அப் படியேதான் இருக்கிறது. உன் மகன் விஜயத்துவஜன் எல்லாவற்றையும் பாதுகாத்துக் கொண்டு நன்கு ஆட்சி புரிந்து கொண்டிருக்கிறான். உன் தந்தை கிராமத்தை விட்டு நகரத்திற்கு வரவில்லை. குளிர் காலத்தில் அவர் படுக்க ஒரு பலகையோ அல்லது போர்த்திக் கொள்ள ஒரு போர் வையோ இல்லை. ஆடு மாடுகளுக் கிடையே நெருப்புக் கணகணப்பில் தான் தரையில் படுத்து உறங்குகிறார். மற்ற நாட்களில் அவர் திராட்சைத் தோட்டத்திலோ அல்லது எங்கா வதோ படுத்து உறங்கி விடுகிறார். நீ இன்னும் வந்து சேரவில்லையே என்ற கவலை அவரை வாட்டுகிறது. நானும் உனக்காகக் கவலைப்பட்டுத்தான் இறந்தேன்'' என்றாள்.

ரூபதரன் தன் தாயைக் கட்டித் தழுவப் பல முறை முயன்றும் முடிய வில்லை. அப்போது அவனது தாய் ''நீ மனித உடலோடு இருக்கிறாய் நானோ இறந்து ஆவி உருவில் இருக் கிறேன். அதனால்தான் உன்னால் என்னைக் கட்டித் தழுவ முடிய வில்லை. நீ விரைவில் இங்கிருந்து போய்விடு. இங்கு நடந்ததை எல் லாம் நீ உன் மனைவியிடம் கூறு'' என்றாள்.

**(தொடரும்)**



# காரணம் இதுவா?

மருங்காபுரி ஜமீன்தாரரிடம் மருதன் என்ற வேலையாள் இருந்தான். அவனுக்கு வீட்டிலுள்ள பொருள்களை எல்லாம் சுத்தமாகத் துடைத்து வைப்பதுதான் வேலை. ஆனால் அவன் மேஜை, நாற்காலி, அலமாரி, பீரோ ஆகியவற்றைச் சரிவரத் துடைக்காமல் ஜமீன் தாரருடைய வெள்ளி வெற்றிலைப் பெட்டியை மட்டும் தினமும் விழுந்து விழுந்து துடைத் துப் பளபளவென்று செய்து வந்தான்.

இதை கவனித்த ஜமீன்தாரர் ''நீ என் வெற்றிலைப் பெட்டியை மட்டும் சுத்தமாகத் துடைத்து வைக்கிறாயே. இது ஏன்?'' என்று கேட்டார்.

மருதனும் ''நானும் தினமும் உங்கள் வெற்றிலைப் பெட்டியிலிருந்து வெற்றிலை, பாக்கு, புகையிலை எல்லாம் எடுத்துப் போட்டுக் கொள்கிறேன். நான் உபயோகிக்கும் பொருள் சுத்தமாக இருக்க வேண்டாமா?'' என்றான்.

மறுநாள் முதல் ஜமீன்தாரர் அந்த வெற்றிலை பெட்டி அவன் கண்ணில் படாமல் ஒளித்து வைத்து வரலானார்.






# கண்ணாடியின் சக்தி

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தில் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! நீ ஏதாவது மகிமை வாய்ந்த அற்புதப் பொருளை அடைவதற்காக இவ்வளவு சிரமப்படுகிறாயா? இவ்வளவு பயங்கர நடுநிசியில் நீ பாடுபட்டு அதை அடைந்தாலும் அதை நீ தக்க வைத்துக் கொள்ள முடியுமா என்பது சந்தேகமே. இதற்கு உதாரணமாக மார்க்கபுரி இளவரசன் மகாசேனனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

மார்க்கபுரி இளவரசன் மகாசேனன் விந்திய மலைச் சாரலில் மகேந்திர முனிவரின் குருகுலத்தில் சேர்ந்து

வேதாளம் சொல்லும் கதை



கல்வி கற்று வந்தான். அவன் நான்கு வருடங்கள் குருகுலவாசம் செய்து எல்லா சாஸ்திரங்களையும் கற்றான். அவன் குருகுலத்திலிருந்து விடை பெற்றுக் கிளம்பும்போது மகேந்திர முனிவர் ''நான் என் சீடர்களுக்கெல் லாம் அவரவர் தகுதிக்கு ஏற்ப பரிசுகள் அளித்தேன். உனக்கு இந்த மகிமை வாய்ந்த கண்ணாடியைக் கொடுக் கிறேன். இதன் முன் நிற்பவனைப் பற்றிய எல்லா விவரங்களையும் இது கூறி விடும். இதை நீ புத்திசாலித்தனத் துடன் பயன்படுத்தி நற்பயனை அடை. நல்ல அரசன் என்ற பெயரைப் பெறு. இது இனிமேல் பயன்படாது என்று உனக்குத் தோன்றும் போது இதை எனக்கே திருப்பிக் கொடுத்து விடு'' என்று கூறி ஒரு அழகிய கண்ணாடியை கொடுத்து ஆசிகள் கூறி அனுப்பினார்.

மார்க்கபுரியை அடைந்த மகா சேனன் சில ஆண்டுகளுக்குப் பிறகு அந்நாட்டின் மன்னனானான். ஒரு முறை பூபதி என்ற மல்லனும், தீரன் என்ற வாட்போர் வீரனும் பூபாலன் என்ற வில் வீரனும் மார்க்கபுரிக்கு வந்தார்கள். அவர்கள் இலங்கையி லிருந்து வந்தவர்கள். அவர்களில் பூபதி மற்போரில் தனக்கு நிகர் யாரு மில்லை என்று உலகப் புகழ் பெற்ற வன். இது போல் தீரன் என்பவன் வாட்போரில் யாவரையும் வென்ற வன். பூபாலனோ அம்பு எய்வதில் அர்ஜுனனுக்கு நிகரானவன் என்று பெயர் பெற்றவன். அவர்கள் மகா சேனனிடம் ''எங்கள் மூவரில் யார் உயர்ந்தவர் என்று யாராலும் கூற முடியவில்லை. உங்களிடம் மகிமை வாய்ந்த ஒரு கண்ணாடி இருக்கிற தாமே. அதைக் கொண்டு எங்கள் பிரச்னைக்கு முடிவு கூறுங்கள்'' என்ற னர்.

அவர்கள் தம் திறமைகளை அவ னுக்குக் காட்டவே மகாசேனனும் அவர்கள் மிகச் சிறந்த வீரர்கள் எனக் கண்டு கொண்டான். அவன் அவர்கள் மூவரையும் தன் கண்ணாடி முன் நிறுத்தி ''கண்ணாடியே! இவர்களில் யார் சிறந்தவர் எனக் கூறு'' என்று கேட்டான்.

வீரர்கள் மூவரும் மகாசேனனும்

கண்ணாடி என்ன சொல்லப் போகிறது என்று ஆவலுடன் எதிர்பார்த்தார்கள். அம்மூவரில் ஒருவரைத்தான் கண்ணாடி சொல்லும் என்று ஆவலுடன் இருந்தார்கள். ஆனால் அவர்கள் எதிர்பார்த்தது போல் அது எதுவும் கூறவில்லை. அது கண்டு எல்லோரும் திகைத்தனர்.

கண்ணாடி எந்த பதிலையும் கூறாமல் போகவே மகாசேனன் ஆச்சரியப்பட்டு மீண்டும் மீண்டும் கேட்டான். ஆனால் அதனிடமிருந்து எந்த பதிலும் கிடைக்காமல் இருக்கவே அந்த மூன்று வீரர்களும் தம் பிரச்னைக்கு தீர்வு காண முடியவில்லையே என்று வருத்தப்பட்டுக் கொண்டே சென்று விட்டார்கள்.

சில நாட்களுக்குப் பின் கோசல நாட்டிலிருந்து பலபீமன், வீரபாகு என்ற இரு மல்லர்கள் வந்தார்கள். அவர்கள் இருவருமே சிறந்த மல்லர்கள் என்று பெயர் பெற்றவர்கள். எந்த மல்யுத்தத்திலும் அவர்கள் தோற்றதில்லை. அவர்கள் இருவரும் ஒரு முறை மல்யுத்தம் செய்தும் யாரும் வெற்றி பெறவில்லை இருவரும் சரி சமமாகவே இருந்தனர். அதனால் அவர்கள் தம்மில் யார் சிறந்தவர் என்று மகாசேனனிடம் கேட்கவே மகாசேனனும் இம்முறையாவது கண்ணாடி பதில் சொல்கிறதாவென கண்ணாடியைக் கொண்டு வந்து அவர்கள் முன் வைத்து ''கண்ணாடியே! இவர்கள் இருவரில் யார் சிறந்தவர்?''



என்று கேட்டான்.

மறுநிமிடமே கண்ணாடி வீரபாகு என்று கூறியது. மகாசேனன் தன் கண்ணாடி சக்தியை இழந்து விடவில்லை எனக் கண்டு மகிழ்ந்தான். பிறகு அவன் கண்ணாடியிடம் ''வீரபாகு பலபீமனை விட எவ்வகையில் உயர்ந்தவன்?'' என்று கேட்டான். கண்ணாடியும் ''பலபீமன் ஒரு மந்திரவாதி கொடுத்த தாயத்தைக் கட்டிக் கொண்டு மற்போர் புரிவதால் அவனுக்குத் தோல்வி ஏற்படுவதில்லை'' என்றது.

இதைக் கேட்ட கண்ணாடி முன் நின்ற பலபீமன் அவமானத்தால் தலை குனிந்தான். வீரபாகுவோ ஆத்திரம் கொண்டு பலபீமன் கையில்



கட்டி இருந்த தாயத்தைப் பிடுங்கித் தூர எறிந்தான். அதன் பிறகு வீரபாகுவுக்கும் பலபீமனுக்கும் இடையே மற்போர் நடத்தப்பட்டது. வீரபாகு எளிதில் பலபீமனைத் தோற்கடித்து விட்டான். கண்ணாடி சொன்னது உண்மை என்று நிரூபிக்கப்பட்டு விட்டது.

மார்க்கபுரியின் பக்கம் சிவகிரி, தவளகிரி என்ற இரு சிறு நாடுகள் இருந்தன. சிவகிரி இளவரசி சியாமளாவும் தவளகிரி இளவரசி தாராவும் மிக மிக அழகானவர்கள் என்று புகழ் பெற்றிருந்தார்கள். மகாசேனன் அந்த இருவரின் உருவப் படங்களை வரவழைத்தான். இருவரும் மிகமிக அழகானவர்களே என்று அவனுக்குத் தெரிந்தது. அவர்களில் ஒருத்தியைத் தேர்ந்தெடுத்து மணம் புரிந்து கொள்ள விரும்பி அவன் அவர்களது தந்தைகளிடம் ''நீங்கள் உங்கள் மகளை அழைத்துக் கொண்டு வந்து என் விருந்தினராக சில நாட்கள் இருக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டான்.

சிவகிரி மன்னன் தன் மகள் சியாமளாவையும் தவளகிரி மன்னன் தன் மகள் தாராவையும் அழைத்துக் கொண்டு மார்க்கபுரிக்கு வந்தார்கள். அவர்களை மகாசேனன் வரவேற்று விடுதிகளில் கொண்டு விட்டு உபசரித்தான். இதற்கு இரு நாட்களுக்குப் பின் அவர்களை அழைத்து ''நான் சியாமளாவின் உருவப் படத்தையும் தாராவின் உருவப் படத்தையும் பார்த்தேன். இவர்களில் யார் மிக அழகானவள் என்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை. அவர்களை இப்போது நேரிலும் பார்த்து விட்டேன். அப்படியும் அவர்களில் மிகவும் நல்ல அழகி யாரென்று என்னால் தீர்மானிக்க முடியவில்லை. ஆனால் எப்படியும் ஒரு முடிவை நான் தெரிவிக்க வேண்டுமே அதனால் இதற்கு முடிவு கூறும்படி என்னிடமுள்ள மாயக் கண்ணாடியிடம் கேட்கப் போகிறேன். இரு இளவரசிகளும் இந்தக் கண்ணாடியின் முன் நின்றால் அது தீர்ப்பளித்து விடும். இதற்கு சம்மதம் தானே?'' என்று கேட்டான்.

அதற்குச் சம்மதித்து சியமளா கண்

ணாடி முன் போய் நின்றாள். ஆனால் தாராவோ" மார்க்கபுரி அரசர் குருடர் என எனக்கு இப்போது தெரிந்து விட்டது. இப்படிப்பட்டவரை மணக்க நான் தயாராக இல்லை. எனவே நான் அந்தக் கண்ணாடிமுன் நிற்க மாட்டேன்'' என்றாள். இதைக் கேட்ட தவளகிரி மன்னன் தன் மனதில் ''ஐயோ! என் மகள் இப்படிக் கூறியதால் மகாசேனன் கோபம் கொண்டு என்ன செய்வானோ'' என்று எண்ணி பயப்படலானான்.

மகாசேனன் தாரா கூறியது கேட்டு முதலில் கோபப்பட்டாலும் இரண்டொரு நிமிடங்கள் கழித்து சற்று யோசித்தான். பிறகு தவளகிரி மன்னனிடம் ''எனக்கு உங்கள் மகளைப் பிடித்துப் போயிற்று. அவளுக்கும் என்னைப் பிடித்திருந்தால் உடனே நீங்கள் எங்கள் திருமணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்யலாம்'' என்றான். மகாசேனனின் இந்த முடிவு எல்லோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தியது, இதற்குச் சிலநாட்களுக்குப் பின் மகாசேனனுக்கும் தாராவுக்கும் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

ஒருநாள் அரண்மனைக் காவலாளிகளில் ஒருவனான மாயன் என்பவன் ராணி தாரா குளிக்க போகுமுன் தன் நகைகளை எல்லாம் கழற்றி நகைப் பெட்டியில் வைப்பதைப் பார்த்தான். அவள் குளிக்கச் சென்றதும் சுற்றிலும் பார்த்தான். யாரும் இருக்கவில்லை. பூனைபோல் அடிமேல் அடி எடுத்து



நகைப் பெட்டி வைக்கப்பட்டிருந்த இடத்திற்குச் சென்றான். அப்பெட்டியைத் திறந்து அதிலிருந்து வைர மாலையைத் திருடி அரண்மனைப் பூங்காவிலுள்ள அரச மரத்தின் பொந்தில் ஒளித்து வைத்தான். அதை சில நாட்கள் கழித்து அங்கிருந்து எடுத்துப் போக அவன் திட்டம் போட்டிருந்தான். ஆனால் மாயன் வைர மாலையை ஒளித்து வைத்ததை அரண்மனை வேலைக்காரி அமுதா பார்த்து விட்டாள். மாயன் அங்கிருந்து போனதும் அவள் அந்த மரத்தடியே போய் பொந்திலிருந்து வைர மாலையை எடுத்துக் கொண்டு தன் வீட்டிற்குப் போய் விட்டாள்.

ராணியின் வைரமாலை காணப்



படவில்லை என்ற செய்தி மகாசேனனுக்கு அறிவிக்கப்பட்டது. ராணி தன் நகைகளைச் கழற்றி வைத்து விட்டுக் குளிக்கப் போய் விட்டு சில நிமிடங்களில் திரும்பி வந்தாள். அதற்குள் வைர மாலை காணாமல் போய் விட்டது. வெளியாள் யாரும் வரவில்லை. அப்படியானால் இந்தத் திருட்டை அரண்மனையில் அந்தப்புரப் பணிப் பெண்களில் ஒருத்தியோ அல்லது காவலாளிகளில் ஒருவனோதான் செய்திருக்க வேண்டும் என மகாசேனன் ஊகித்து விட்டான். எனவே அவர்களை எல்லாம் தன் கண்ணாடி முன் அவன் நடக்க வைத்தான்.

முதலில் வேலைக்காரர்கள் கண்ணாடி முன் சென்றதால் அது மாயனைத் திருடன் எனக் கூறியது. அதைக்கேட்டு அமுதா முகம் மலர்ந்து போனதை ராணி தாரா கவனித்து விட்டாள். அவள் உடனே அமுதாவைப் பிடித்துக் கொள்ளும்படி வீரர்களுக்குக் கட்டளை இட்டாள்.

அப்போது மகாசேனனும் அவளைக் கடுமையாக விசாரிக்கவே அமுதாவும் அவனது கால்களில் விழுந்து "இந்த மாயன் வைர மாலையை மரப்பொந்தில் ஒளித்து வைத்ததை நான் பார்த்தேன். இவன் அங்கிருந்து போனபின் நான் போய் அந்த மரப் பொந்திதிலிருந்து வைர மாலையை எடுத்துக் கொண்டு என் வீட்டிற்குப் போனேன்" எனக் கூறினாள். பிறகு தன் வீட்டிலிருந்து அவள் வைரமாலையை எடுத்து வந்து மன்னனிடம் கொடுத்தாள்.

மன்னனும் வைரமாலையை ராணியின் கழுத்தில் அணிவித்து அவள் கூர்ந்து கவனித்த திறமையை மிகவும் பாராட்டினான். பிறகு அவன் "இந்த மாயக்கண்ணாடியால் நன்மைகள் ஏற்பட்டாலும் தீமைகள் ஏற்படவும் கூடும். இது இன்று தெரிந்து விட்டது. எனவே இதை என் குருவிடம் திருப்பிக் கொடுத்துவிட்டு அவரது ஆசிகளைப் பெற்று வருகிறேன்" என்று கூறி விட்டுக் கிளம்பிச் சென்றான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "முனிவர் கொடுத்த மாயக்கண்ணாடி முதலில் வந்த மூன்று மாவீரர்களில்

யார் சிறந்தவன் எனக் கூற முடியாமல் போயிற்று. வைரமாலை திருட்டிலும் மாயனைத்தான் திருடன் எனக் கூறியது. இதனால் அது சில சமயங்களில் பதில் கூற முடியாது போனது தெரிகிறது. இரு அரசகுமாரிகளில் யார் அழகி எனக்காண அவர்கள் இருவரையும் கண்ணாடி முன் நிற்கச் சொன்ன போது தாரா ஏன் நிற்க மறுத்தாள்? அவள் மகாசேனனைக் குருடன் என ஏன் கூறினாள்? அப்படிக் கூறிய தாராவை மகாசேனன் ஏன் மணந்து கொண்டான்? மாயக் கண்ணாடியால் தீமைகளும் விளையக் கூடும் என மகாசேனன் கூறியது சரியா? என் இந்தக் கேள்விகளுக்கு நீ சரியான விடைகள் தெரிந்தும் கூறாவிட்டால் உன் தலை வெடித்துக் சுக்கு நூறாகி விடும் என்றது.

விக்கிரமனும் ''மாயக்கண்ணாடியின் சக்தி அபாரம் என்பதில் சந்தேகமே இல்லை ஆனால் அதன் சக்தி வரையறுக்கப்பட்டது என்பதை கவனிக்க வேண்டும். மூன்று வீரர்கள் விஷயத்தில் அவர்கள் ஒவ்வொருவரும் தம் துறையில் சிறந்தவர்கள். அதனால் யார் உயர்ந்தவர் என ஒப்பிட முடியாது. ஒரு பெண்ணின் அழகு பற்றி ஒரு கண்ணாடியா தீர்மானிப்பது என்று கோபம் கொண்டே தாரா அதன் முன் நிற்க மறுத்தாள். இதனால்தான் மகாசேனனை அவள் குருடன் எனக் கூறினாள். இதை ஊகித்த மகாசேனன் அவளைப் பெரிதும் மதித்து மணம் புரிந்து கொண்டான். வைரமாலை திருட்டு விஷயத்தில் அது மாயனை மட்டும் திருடன் எனக்கூறியது. அத் திருட்டில் சம்மந்தப்பட்ட அமுதா தப்பிக்க வாய்ப்பிருந்தது. இம்மாதிரி இனியும் நிகழலாம் என எண்ணி மகாசேனன் அக்கண்ணாடியால் தீமைகளும் நேரலாம் என எண்ணினான்'' என்றான்.

விக்கிரமனின் இந்த சரியான பதிலால் அவன் மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# படுமுட்டாள் பட்டம்

அண்ணாமலை என்ற கப்பல் வியாபாரியிடம் பலர் கணக்கெழுதும் வேலை பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களில் பலர் தம் வேலைகளைச் சரிவரச் செய்யாமல் வெட்டி அரட்டை அடிப்பவர்கள். ஆனால் கணபதி என்பவன் மட்டும் தன் வேலையோடு மற்றவர்களின் வேலைகளையும் சேர்த்து செய்து வந்தான்.

ஒருநாள் அண்ணாமலை தன்னிடம் வேலை செய்பவர்களிடம் ''உங்களில் பலர் சரிவர வேலை செய்யாதிருப்பதை கவனித்து வருகிறேன். அவர்கள் திருந்தி சரிவர வேலை செய்யாவிட்டால் அவர்களுக்குப் படுமுட்டாள் என்ற பட்டம் கொடுப்பேன்'' என்று கூறினார்.

இதைக் கேட்டு ஒரு சிலர் திருந்தி தம் வேலைகளைச் செய்யலாயினர். ஓரிருவர் திருந்தவில்லை. கணபதி வழக்கம் போலத் தன் வேலையோடு அந்த வேலை செய்யாதவர்களின் வேலைகளையும் சேர்த்துச் செய்து வரலானான்.

இதைக் கண்ட அண்ணாமலை ''நீ மற்றவர் வேலைகளையும் சேர்த்துச் செய்வதும் சரிவர வேலை செய்யாதது போலத்தான். உனக்குப் படுமுட்டாள் என்ற பட்டத்தைக் கொடுக்க வேண்டுமா?'' என்றார்.

கணபதி அன்று முதல் மற்றவர்களின் வேலைகளைச் செய்வதில்லை என்று அண்ணாமலையிடம் கூறித் தன் வேலையை மட்டும் சரிவரச் செய்து வரலானான்.



கடற்கரையோரப் பயணங்கள்-1

# கச் - சௌராஷ்டிரம்

படைப்பு: **மீரா நாயர்** ✱ ஓவியம்: **கோபிகுமார்**

உலகிலேயே மிக நீளமான கடற்கரையைக் கொண்ட நாடுகளில் நம் பாரத நாடும் ஒன்று. நம் நாட்டுக் கடற்கரையின் மொத்த நீளம் 7500 கி.மீ.க்கும் மேலுள்ளது. இந்த நீளக் கடற்கரை ஓரத்தில் சுண்ணாம்புக் கற்களையும், பாறைகளையும், மடுக்களையும், குளங்களையும், பரந்து கிடக்கும் மணல் வெளியையும், வரலாற்றுப் புகழ் பெற்ற அமைப்புகளையும், பழங்கால, இக்கால நகரங்களையும் மீனவர் குப்பங்களையும் காணலாம்.

நம் நாட்டு கரையோரப் பயணம் குஜ ராத்திலிருந்து ஆரம்பமாகிறது. கச்சிற்குக் கிழக்கிலும் வடக்கிலும் உப்பேரிகள் நிரம் பிய மனித நடமாற்றமற்ற 'ரான் ஆஃப் கச்' என்ற பொட்டல் பகுதி உள்ளது. குளிர் காலத்தில் வெகு தூரத்திலுள்ள நாடுகளிலி ருந்து பலவிதப் பறவைகள் இங்கு வருகின் றன. மத்திய ஆசியாப் பகுதியில் கடுங் குளிர் ஏற்படுவதால் அதனின்று தப்ப ஃப்ளே மிங்கோ போன்ற பறவைகள் இங்கு வந்து தங்குகின்றன.



நம் நாட்டில் ரான் பகுதியில்தான் ஃப்ளே மிங்கோக்கள் முட்டையிட்டுக் குஞ்சு பொறிப்பதைக் காணலாம். இப் பகுதியின் சிறப்பு இங்கு காணப்படும் இளஞ் சிவப்பும் ஊதா நிறமும் கலந்த காட்டுக்கோவேறு கழுதைகளே. இவை எந்த வெப்ப தட்பநிலையிலும் எப்பகுதியிலும் இருக்கக் கூடிய சக்தியை பெற்றவை. இவற்றின் உடல் தோல் அவ்வாறு அமைந்துள்ளது. இவை தண்ணீரை நீண்ட காலத்திற்குத் தம் உடலில் வைத்திருக்கும். இவற்றைப் பாதுகாக்க 1773ல் இங்கு 4840 கி.மி. பரப்பில் தங்காத்ரா விலங்குகள் சரணலாயம் அமைக்கப்பட்டு உள்ளது. மிக அமைதியாக இருந்த இப்பகுதி 1965ல் இந்திய பாகிஸ்தான் போர் நடந்த போது முக்கிய ராணுவ மையமாக விளங்கியது.



**காட்டுக் கழுதை**

கச் கடற்கரையில் மாண்டவி, முந்திரா, ஜகான், லக்பத், கோடீஸ்வர், காண்ட்லா என்ற துறை முகங்கள் உள்ளன. இவற்றில் மாண்ட்வி முக்கியமான பழங்காலத் துறைமுகம். மவபார் பகுதி யிலிருந்து வந்த ஏலக்காய், மிளகு, இஞ்சி, மற்றும் தானிய வகைகளை இங்கு கப்பல்களில் ஏற்றி மஸ்கட், ஆப்பிரிக்க நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து வந்தனர். அந்நாடுகளிலிருந்து பேரீச்சை, பருத்தி, ஆடைகள், சர்க்கரை, எண்ணெய், காண்டா மிருகத்தோல், படிக்காரம் முதலியவற்றை இங்கு இறக்குமதி செய்து வந்தனர். இக் கப்பல்கள் வருவதை மாண்ட்வி வியாபாரிகள் அங்குள்ள உயரமான பந்தயச் சிகரத்தின் மீது நின்று எந்தக் கப்பல் முதலில் வரும் என்று பந்தயம் கட்டுவார்களாம்.

வடமேற்கு இந்தியப் பகுதிக்குப் பயன்படும் துறைமுகம் காண்ட்லா. இது ஒரு இயற்கைத் துறைமுகம். 1955ல் இதில் கப்பல் துறை கட்டப்பட்டது. கச் மன்னர் மாதவராவால் கேங்கர்ஜீயின் இடைவிடாத முயற்சியால் இந்தக் கப்பல் துறை அமைக்கப்பட்டது இது தான் நாட்டில் வரி இல்லாத சுதந்திர வியாபார மண்டலமாக அறிவிக்கப்பட்ட முதல் துறைமுகம். காண்ட்லாவின் அருகில் ஆசியா விலேயே மிகப் பெரிய உப்பு தயாரிக்கும் தொழிற் சாலைகள் உள்ளன.



தீபகற்பத்தின் மேற்கு முனையில் துவாரகை உள்ளது. யாதவர்களுக்காக ஸ்ரீகிருஷ்ணர் உருவாக்கிய துவாரகை நகரம் கடலில் மூழ்கி விட்டதாகக் கூறுகிறார்கள். சமுத்திரம் 12 யோஜனை பரப்புள்ள நிலத்தை அவருக்குக் கொடுத்தது என்றும் அவருடைய மறைவிற்குப் பின் அந்த இடத்தைத் திரும்ப எடுத்துக் கொண்டு விட்டதாயும் புராணக் கதை கூறுகிறது. அண்மையில் கடல் பழம் பொருள் ஆராய்ச்சி நிறுவனம் நடத்திய ஆய்வில் அப்பகுதியில் அந்நகரம் இருந்ததற்கான பாழடைந்த சில பகுதிகள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

**துவாரகையிலுள்ள கோயில்**



மகாத்மா காந்தி பிறந்த போர்பந்தர் சோமநாத புர வழியில் உள்ளது. இதனைச் சுண்ணாம்புக்கல் நகரம் என்று கூறுகிறார்கள். இங்கு கீர்த்தி மந்திரில் காந்திஜீ வசித்த அறை, நூல் நூற்ற இடம், படுக்கை அறை, பிரார்த்தனை

மண்டபம், அவரது
தில் கட்டப்பட்ட 79 அடி
சலவைக் கல் பலகை
ஸ்ரீகிருஷ்ணர் தம்
தான் இன்றைய போர்
கிறார்கள்.

பிரபாஸி பாட
உள்ளது. நம் நாட்
டுப் புனித பனி
ரெண்டு ஜோதிர்
லிங்கங்களில்
ஒன்று இங்கு
இருப்பதாகக்
கருதுகிறார்
கள்.

வாழ்க்கை சம்மந்தப்பட்ட காட்சிகளைச் சித்திரிக்கும் விதத்
உயரக் கம்பம் அவரது கொள்கைகள் பொறிக்கப்பட்ட
களோடு கம்பீரமாக நிற்கிறது.

நண்பரான குசேலருக்காக நிர்மாணித்த சுதாமாபுரி
பந்தர் என்று உள்ளூர்வாசிகள் கதையாகக் கூறு

ளில் அரபிக்கடலுக்கு எதிரே சோமநாதர் ஆலயம்



**சோமநாதர் ஆலயம்**

இந்த ஆலயம் கி.பி. முதலாவது நூற்றாண்டில் கட்டப்பட்டதாக வரலாறு கூறுகிறது. பல மன்னர்கள் கொடுத்த பணத்தால் இது நன்கு கட்டப்பட்டது. நம் நாட்டின் புகழ் பெற்ற இந்த ஆலயத்தின் கர்ப்பக் கிருகத்தில் எரியும் தீப ஒளியில் நகைகளும், நவரத்தினங்களும் கண்ணைப் பறிப்பவை. கோவில் மணியை அடிக்க தங்கச் சங்கிலி இணைக்கப்பட்டிருந்தது. கோவிலின் இந்த விலையுயர்ந்த பொருள்களே அதன் அழிவிற்குக் காரணமாயின. கஜினி முகம்மது பல முறை படை எடுத்து முடிவில் கி.பி. 1025ல் இக் கோவிலைக் கொள்ளை அடித்தான். இதிலிருந்த தங்கத்தையும், வைரங்களையும் ரத்தினங்களையும் ஆபரணங்களையும் மற்றுமிருந்த விலையுயர்ந்த பொருள்களையும் யானைகள் மீதும், ஒட்டகங்கள் மீதும், குதிரைகள் மீதும் ஏற்றிக் கொள்ளை கொண்டு சென்றான். அதன்பின் குஜராத், மால்வா மன்னர்கள் இந்த ஆலயத்தை மீண்டும் நிர்மாணித்தார்கள். அதன் பிறகு எழு நூறு ஆண்டுகளில் எதிரிகள் இதனை ஆறு முறைகள் தாக்கிக் கொள்ளையடித்துப் பல பொருள்களைக் கவர்ந்து சென்றார்கள். இதன் பிறகு இந்த ஆலயம் 1951 மே 11ந் தேதி மீண்டும் நிர்மாணிக்கப்பட்டு இந்தியக் குடியரசின் முதல் தலைவர் டாக்டர் ராஜேந்திர பிரசாத் இதில் ஜோதிர்லிங்கத்தை பிரதிஷ்டை செய்தார்.

 



# பாட்டில் பிசாசு

விவாகமாகிக் குடித்தனம் செய்ய வந்த விமலா தன் கணவன் பசுபதி தன் பாட்டியை தெய்வமாக மதித்து அவள் சொல்கிறபடி நடப்பதைக் கண்டாள். இளம் வயதில் பெற்றோரை இழந்த பசுபதியை அந்தப் பாட்டி பார்வதி தான் வளர்த்துப் பெரியவனாக்கிய வள். அவளுக்கு ஊரில் மகா வாயாடி என்ற பட்டப் பெயர். அவள் விமலா வின் தலையில் வீட்டு வேலைகளை எல்லாம் சுமத்தி அவ்வப்போது திட்டி அடித்தும் வந்தாள்.

பார்வதியின் தொல்லைகளைப் பொறுக்க முடியாமல் விமலா ஒரு நாளிரவு தற்கொலை செய்து கொள் ளும் எண்ணத்தோடு ஊர் எல்லையி லுள்ள ஆலமரத்தடியே சென்றாள். அங்கு ஒரு மந்திரவாதி பிசாசுகளைப் பிடிக்க வந்திருந்தான். அவன் விமலா வைக் கண்டு விசாரித்து அவளைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டான்.

அவன் ''நீ தற்கொலை செய்து கொள்ள வேண்டாம். உனக்கு ஒரு பாட்டிலைக் கொடுக்கிறேன். அதன் மூடியைத் திறந்தால் அதிலிருந்து ஒரு பிசாசு வெளியே வந்து எவ்வளவு கடினமான வேலையையும் செய்து விடும். வேலை முடிந்ததும் அது பாட்டிலுக்குள் போய் விடும். நீ பாட் டிலை மூடி போட்டு மூடி விடு. இப் படி அந்தப் பிசாசு நூறு முறை உதவி செய்யும். அதற்குப் பின் அந்தப் பிசா சிற்கு விடுதலை கிடைக்கும். அது பாட்டிலை விட்டும் போய் விடும். இதைக் கொண்டு நீ பிறரைத் துன் புறுத்த மட்டும் கூடாது'' எனக்கூறி பாட்டிலை அவளுக்குக் கொடுத்து அனுப்பினான்.

வீட்டிற்கு வந்து படுத்த விமலா மறுநாள் காலை பார்வதியின் வசைச் சொற்களைக் கேட்டுக் கொண்டே

—காரை. குருமூர்த்தி—

எழுந்தாள். பார்வதியோ ''என்னது தூக்கம்? வீடு பெருக்கி, மெழுகிக் கோலம்போட்டுக் குளித்து நாளையப் பண்டிகைக்கு வேண்டியவற்றை எல் லாம் தயார் செய்ய வேண்டுமே. போ. எல்லாம் 'மள மள'வென்று செய்'' என்று உறுமினாள்.

அதைக் கேட்டு விமலா சற்றும் கவலைப்படவில்லை. எழுந்து போய் மந்திரவாதி கொடுத்த பாட்டிலை எடுத்து அதன் மூடியைத் திறந்தாள். அதிலிருந்த பிசாசு வெளியே வந்தது. அதனிடம் பார்வதி சொன்ன வேலை களை எல்லாம் சொல்லிச் செய்து முடிக்கச்சொன்னாள். அது நொடியில் அந்த வேலைகளை எல்லாம் செய்து சமையலையும் செய்து முடித்தது.

பார்வதி தான் சொன்ன வேலை களை எல்லாம் சீக்கிரத்தில் விமலா செய்து முடித்தது கண்டு ஆச்சரியப்பட் டாள். சமையலாகி விட்டதால் சாப் பிட்டாள். அவ்வளவு ருசியான சமை யலை அதுவரை அவள் சாப்பிட்டதே இல்லை.

மறுநாள் பண்டிகைக்கு விமலா வின் தாய் தந்தையர் மகளைக் காண வந்தார்கள். பார்வதி அவர்களிடம் விமலாவைப் பற்றி புகழ்ந்து கூறி னாள். அதுகேட்டு அவர்கள் மகிழ்ந் தனர். தம் மகள் சுகமாக இருப்பது கண்டு திருப்தி அடைந்து அவர்கள் தம் ஊருக்குத் திரும்பிச் சென்றார்கள்.

அவர்கள் போனதும் பார்வதி பழைய குணத்தைக் காட்டலானாள். வீட்டில் ஒரே குப்பை என்றும் அழுக் குத் துணிகள் நிறையச் சேர்ந்து விட்ட



தென்றும் கூறி வீட்டைச் சுத்தம் செய்ய வும் மலைபோலத் துணிகளைக் குவித்து அவற்றை எல்லாம் துவைக் கும் படியும் விமலாவிடம் கூறினாள். விமலா அதற்காக கவலைப்பட வில்லை. பாட்டில் பிசாசின் உதவி யால் எல்லாம் செய்து முடித்தாள்.

இதைக்கண்ட பார்வதி மலைத்துப் போனாள். அவளிடம் ஏதோ மாய சக்தி இருப்பதால்தான் இவ்வளவு விரைவில் எல்லா வேலைகளையும் செய்கிறாள் என்று அவள் எண்ணி னாள். மறுநாளும் துவைக்க நிறையத் துணிகளை விமலாவிடம் கொடுத்து ''இவற்றைக் கிணற்று நீரில் துவைக் காதே. ஆற்றுக்குப் போய்த் துவைத்து உலர்த்து'' என்றாள். விமலாவும் அந்த வேலையைப் பாட்டில் பிசாசின் உதவி கொண்டு செய்து முடித்தாள்.

விமலா வேலைகளை எல்லாம் விரைவில் செய்து முடித்த போதிலும் பார்வதிக்குக் கொஞ்சம் கூடத் திருப்தி ஏற்படவில்லை. வீட்டுப் பரண் மீதி ருந்த பெரிய அண்டாக்களையெல் லாம் கீழே இறக்கி வைக்குமாறு அவள் விமலாவிடம் சொன்னாள். பிறகு அவற்றை எல்லாம் நன்கு தேய்த்து விட்டு அவற்றில் கிணற்றி லிருந்து நீர் இறைத்து நிரப்பி வைக் கும்படிச் சொன்னாள். அந்த வேலை களை எல்லாம் பாட்டில் பிசாசின் உதவியோடு விமலா நொடியில் செய்து முடித்தாள்.

இதனால் பார்வதியின் ஆத்திரம் அதிகரித்தது. தான் சொன்ன வேலை களை உடனுக்குடனே செய்து முடித்து





விடுவதால் தனக்கு அவளைத் திட்டு வதற்கு வாய்ப்பே கிடைப்ப தில்லையே என்று அவள் மனம் புழுங்கினாள். அவள் சற்றும் இரக்க மில்லாமல் கடினமான வேலைகளை விமலாவின் மீது சுமத்திவரலானாள். விமலா அவற்றை எல்லாம் பாட்டில் பிசாசின் உதவியோடு நொடியில் செய்து முடித்தாள்.

இப்படியாக இரண்டு மாதங்கள் கழிந்தன. பிசாசும் அதுவரை விமலா சொல்லிய தொண்ணூற்றெட்டு வேலைகளைச் செய்து விட்டது. இன்னமும் இரண்டு வேலைகளைச் செய்து விட்டால் அதற்கு விடுதலை கிடைத்து விடும். பிசாசு இதை எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தது.

விமலாவோ பிசாசு போய் விட்டால் தன் நிலை என்னவாகும் என்று எண்ணிக் கவலைப்படலானாள்.

அப்போது பார்வதி விமலாவிடம் ''என்ன சும்மா உட்கார்ந்து கொண்டி ருக்கிறாய்? நம் வீட்டுக் கிணற்றின் நீர் உப்பாக உள்ளது. அதை எல்லாம் இறைத்து வெளியே கொட்டிவிட்டு கிணறு நிறைய ஆற்று நீரைக் கொண்டு வந்து கொட்டு'' என்று கட்டளை இட்டாள்.

விமலாவும் பாட்டில் மூடியைத் திறந்து பிசாசிடம் பார்வதி கூறிய வேலையைச் சொல்லி அதைச் செய்து முடிக்கச் சொன்னாள். பிசாசும் ''செய் கிறேன். ஆனால் நீ ஏன் எனக்கு இப் படிக் கடினமான வேலைகளாகக் கொடுத்து செய்யச் சொல்கிறாய்?'' என்று கேட்டது. விமலாவும் ''இந்த வேலைகளை எல்லாம் உனக்கு நானா கக் கொடுப்பதில்லை. என் கணவரின் பாட்டி என்னைக் கொடுமைப்படுத்தி இந்த வேலைகளை என் மீது சுமத்து கிறாள். என் மீது இரக்கப்பட்ட மந்திர வாதி இந்த பாட்டிலோடு உன்னை என்னிடம் கொடுத்து உன்னிடம் நூறு வேலைகளை செய்யச் சொல்லலாம் என்று கூறினான். இதுவரை நீ தொண் ணூற்றெட்டு வேலைகளைச் செய்து விட்டாய். இப்போது நீ செய்யப் போவது தொண்ணூற்றொன்பதாவது வேலை. அதற்குப் பின் ஒரு வேலை தான் நீ செய்ய வேண்டி இருக்கும்'' என்றாள்.

விமலா என்ன செய்கிறாள் என்று பார்க்க வந்த பார்வதி அவள் யாருடனோ பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டு அவள் என்ன பேசுகிறாள் என்று மறைந்திருந்து கேட்கலானாள். அப்போது பிசாசு ''சரி. நான் நூறாவது வேலையையும் செய்து முடித்துப் போய் விட்டால் நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டது. விமலாவும் ''எனக்கு வேறு வழி? தற்கொலை தான்'' என்றாள்.

பிசாசும் ''வேண்டாம். வேண்டாம். நீ தற்கொலை செய்து கொள்ள வேண்டாம். நான் ஒரு வழி சொல்கிறேன். நான் கூட என் பேரனின் மனைவியைக் கொடுமைப்படுத்தியதால்தான் இப்படிப் பிசாசானேன். எனக்கு விரைவில் விடுதலை கிடைத்து விடுமே. அதனால் கொடுமைக்காரியான இந்தப் பார்வதி பாட்டியை நான் கொன்று அவளது ஆவியை நான் விடுதலை ஆனதும் இந்த பாட்டிலில் அடைத்து விடுகிறேன். அதற்குப்பின் அது நீ சொல்லும் வேலைகளை எல்லாம் செய்து கொண்டிருக்கும். இப்போது நான் நீ சொன்ன தொண்ணூற்றொன்பதாவது வேலையைச் செய்யப் போகிறேன்'' என்று கூறி அந்த வேலையைச் செய்த பின் பாட்டிலுக்குள் புகுந்து நூறாவது வேலைக்குக் காத்திருந்தது.

பிசாசும் விமலாவும் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்ட பார்வதி பயந்து போனாள். இனியும் விமலாவைக் கொடுமைப்படுத்திக் கடினமான வேலையைச்சொன்னால் அதை பாட்டில் பிசாசு செய்துவிட்டு விடுதலை பெற்றுத் தன்னைக் கொன்று விடும் என்று எண்ணி பயந்து விமலாவிடம் ஒரு வேலையும் சொல்லாமல் தானே எல்லா வேலைகளையும் செய்யலானாள். விமலாவிடம் பார்வதி எந்த வேலையையும் சொல்லாமல் அன்புடன் நடந்து கொண்டதால் அவளுக்கு பாட்டில் பிசாசின் உதவியை நாட வேண்டிய அவசியமே இல்லாது போயிற்று. பிசாசோ பாட்டிலுக்குள் அடைபட்டே கிடந்தது.





# கோட்டை விட்டாயே!

விதேக நாட்டு மன்னன் தன் மகள் ஜெயமாலாவின் சுயம்வரத்திற்கு எல்லா நாட்டு மன்னர்களுக்கும் அழைப்பு விடுத்திருந்தான். அதற்கு அங்கதேச இளவரசன் அக்கினி மித்திரன் சுயம்வர நாள் அதிகாலையில் மற்ற இளவரசர்களுக்கு முன் வந்து விட்டான். அவன் அரண்மனைக்குப் போகாமல் ஓரிடத்தில் தன் பொருள்களையெல்லாம் வைத்தான். அவனுக்கு ஜெயமாலாவை மணக்க வேண்டுமென்று கொள்ளை ஆசை.

முகூர்த்த வேளைக்கு இன்னமும் வெகுநேரம் இருந்தால் அவன் தலைநகரைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பினான். அவன் ஒரு தெரு வழியே செல்கையில் ஓரிடத்தில் ''இங்கு கிளி ஜோசியம் கூறும். கட்டணம் ஒரு வராகன்தான்'' என்று ஒரு பலகையில் எழுதி தொங்கவிடப் பட்டிருப்பதைக் கண்டான்.

கிளி தனக்கு என்ன ஜோசியம் கூறும் எனப் பார்க்க அவன் ஒரு வராகனைக் கொடுத்து அந்த வீட்டிற்குள் சென்றான். அங்கு ஒரு கூண்டில் ஒரு கிளி வைக்கப்பட்டிருந்தது. அது மனிதர்களைப் போலப் பேசக் கூடியது.

அது அக்கினிமித்திரனைப் பார்த்ததும் ''அங்க நாட்டு இளவரசே! வருக, வருக! உம் வரவு நல்வரவு ஆகுக! எங்கள் இளவரசி ஜெயமாலாவை மணக்க விரும்பும் தாங்கள் எங்கள் நண்பரே. உங்களுக்கு நலன் கிட்டட்டும்'' என்றது.

அதைக் கேட்ட அக்கினிமித்திரன் திடுக்கிட்டான். தான் யார் என்பதையும் எதற்காக வந்தான் என்பதை அக்கிளி கூறியது கேட்டு ஆச்சரியப்பட்டான். தன்னைப் பற்றிய விவரங்களை அக் கிளி எப்படி அறிந்து கொண்டது என அவன் யோசித்து பார்த்தான். அப்போது அவனுக்கு அது தன் உடை

—சி. பாலாஜீ—

களைப் பார்த்து விட்டுத்தான் அவ்வாறு கூறி இருக்க வேண்டும் என்று தோன்றியது. எனவே உடனே அவன் அங்கிருந்து தான் தங்கி இருந்த விடுதிக்குப் போனான். அந்தக் கிளியைப் பரீட்சிக்க வேண்டும் என்று ஆவல் கொண்டு அவன் ஒரு சாதாரண மனிதனைப் போல எளிய ஆடைகளை அணிந்து அக் கிளி இருக்கும் வீட்டிற்குப் போய் ஒரு வராகனைக் கொடுத்து உள்ளே சென்றான்.

கிளி அவனைப் பார்த்ததுமே ''அங்க நாட்டு இளவரசே! வருக, வருக! உம் வரவு நல்வரவு ஆகுக! எங்கள் இளவரசி ஜெயமாலாவை மணக்க விரும்பும் தாங்கள் எங்கள் நண்பரே. உங்களுக்கு நலன் கிட்டட்டும்'' என்றது.

இதைக் கேட்ட அக்கினிமித்திரனின் ஆச்சரியத்திற்கு அளவே இல்லை. ஏனெனில் இம்முறை இளவரசனைப் போல ஆடை அணியாமல் ஒரு சாதாரண மனிதனைப் போல ஆடைகள் அணிந்து வந்திருந்தும் கிளி சரியாகச் சொல்லி விட்டது! ஒரு வேளை இது கூடத் தற்செயலாக நடந்திருக்கலாம். உண்மையிலேயே இக் கிளிக்கு ஜோசியம் கூறும் சக்தி உள்ளதா? அப்படியானால் இக் கிளியை இன்னும் ஒருமுறை பரீட்சித்துப் பார்க்க வேண்டும் என நினைத்துக் கொண்டு அங்கிருந்து சென்றான்.

அவனுக்கு ஒரு வழி தோன்றியது. தான் ஒரு புரோகிதரைப் போல வேடம் பூண்டு சென்றால் கிளியால் அடையாளம் கண்டு கொள்ள முடி



யாது என அவன் எண்ணினான். அதனால் அவன் ஒரு புரோகிதர் கட்டும் எட்டு முழுவேஷ்டி, அங்கவஸ்திரம், மாலை முதலியவற்றை வாங்கினான். வேஷ்டியை பஞ்சகச்சமாகக் கட்டி அங்கவஸ்திரத்தைத் தோளில் போட்டுக் கொண்டு மாலையை அணிந்து கொண்டு கிளி இருக்கும் வீட்டிற்குப் போய் ஒரு வராகன் கொடுத்து உள்ளே சென்றான்.

இம்முறை கிளியால் தன்னை யாரென்று கண்டு கொள்ள முடியாதென அவன் நினைத்தான். ஏனெனில் அவன் முற்றிலும் ஒரு புரோகிதர் போல மாறி இருக்கிறானே. கூண்டிலிருந்த கிளி அவனைப் பார்த்ததும் ''அங்க நாட்டு இளவரசே! வருக, வருக! உம் வரவு நல்வரவு ஆகுக! எம் இளவரசி ஜெயமாலாவை மணக்க வந்து கோட்டை விட்டு விட்டீரே! சற்று முன்தான் முகூர்த்தம் முடிந்தது. விதர்ப்ப நாட்டு இளவரசனை அவள் தேர்ந்தெடுத்து மணந்து கொண்டாள். நீங்களோ வந்த வேலையை கவனிக்காமல் என்னைப் பரீட்சிப்பதில் ஈடுபட்டு நேரத்தை வீணாக்கி விட்டீர்கள். அதனால் முகூர்த்தத்தைக் கோட்டை விட்டு ஏமாந்து விட்டீர்கள். தாம் வந்த வேலையைக் கவனிக்காமல் இதுபோல ஏமாந்தவர்கள் நீங்கள் மட்டுமல்ல. இன்னும் ஐந்து அரச குமாரர்களும் இருக்கிறார்கள். ஆனாலும் நீங்கள் மூன்று முறைகள் வந்து மூன்று வராகன்கள் செலுத்தி என்னைப் பார்த்ததற்கு மிக்க நன்றி'' என்றது.

அது கேட்டு அக்கினிமித்திரன் திகைத்துப் போனான். ஆம்! வந்த வேலையை கவனியாமல் கிளி ஜோசியம் பற்றி அறிய அலைந்தது முட்டாள் தனம்தானே. இது மற்றவர்களுக்குத் தெரிந்தால் பெருத்த அவமானம்! எனவே அந்த ஊரை விட்டு உடனேயே போய் விட வேண்டும் என எண்ணினான். அதன் காரணமாக அவன் அரண்மனைப் பக்கம் தலை காட்டாமல் தன் நாட்டிற்குத் திரும்பிச் சென்று விட்டான்.






அர்ஜுனன் தென் கடற்கரையிலுள்ள சௌபத்திரம் என்ற புனித தீர்த்த ஸ்தலத்தை அடைந்தான். அவன் அங்கு நீராடச் சென்ற போது அங்கிருந்த அந்தணர்கள் அவனைத் தடுத்து ''இதிலும் மற்றுமுள்ள பாலோமி, காரண்டவம், பிரசன்னம், பாரத்வாஜம் ஆகிய தீர்த்தங்களில் குளிக்கவேண்டாம். ஏனெனில் இவற்றில் பயங்கர முதலைகள் உள்ளன. அதனால் நெடுங்காலமாக யாருமே இவற்றில் நீராடுவது இல்லை'' என்றார்கள்.

அர்ஜுனனோ ''நான் இதுவரை சென்ற தீர்த்தங்களில் எல்லாம் நீராடியே வந்திருக்கிறேன். இவற்றிலும் நீராடத்தான் போகிறேன்'' என்று கூறிக் கொண்டே சௌபத்திரத்தில் இறங்கிவிட்டான். அவனைஅக்குளத்திலிருந்த முதலை இறுகப் பற்றியது. ஆனால் அர்ஜுனன் அதை இழுத்துக் கொண்டு கரைக்கு வந்து தூக்கிப் போட்டான்.

தரையில் விழுந்த அந்த முதலை ஒரு அழகிய பெண்ணாக மாறி நின்றது. அதுகண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். அர்ஜுனனோ அவளிடம் ''பெண்ணே! நீ யார்? நீ ஏன் முதலையாகி இந்தத் தீர்த்தத்தில் இருந்தாய்? நான் உன்னைத் தூக்கி தரையில் போட்டதும் எப்படிப் பெண்ணாக மாறினாய்?'' என்று கேட்டான்.

அவளும் அர்ஜுனனிடம் ''மாவீரரே! நான் ஒரு அப்ஸரப் பெண். என் பெயர் வர்க்கை. சாரபேய், சமீசி;

— துவாரகையில் அர்ஜுனன் —

வசா, லதா என்ற என் தோழிகளும் மற்ற நான்கு தீர்த்தங்களில் முதலை களாக இருக்கிறார்கள். நாங்கள் ஒரு சாபத்தால் இப்படி முதலைகளா னோம். நீங்கள் வந்து என்னைக் கரையில் இழுத்துப் போட்டதால் எனக்கு சாப விமோசனம் கிட்டியது. மற்ற தீர்த்தங்களிலுள்ள என் தோழி களையும் இவ்வாறு கரையில் இழுத் துப் போட்டு அவர்களுக்கும் சாபம் நீங்கும்படி செய்யுங்கள்'' என்று வேண்டினாள்.

அர்ஜுனனும் ''அப்படியே செய் கிறேன். ஆனால் உங்களுக்கு இந்த சாபம் எப்படி கிடைத்தது?'' என்று கேட்டான். வர்க்கையும் சாபம் கிடைத்ததைக் கூறலானாள்.

''நாங்கள் ஐவரும் திக்பாலகர் களின் நகரங்களைப் பார்த்து வரக் கிளம்பினோம். எதிர்பாராத விதமாய் பூவுலகிற்கும் வந்தோம். ஒரு வனத் தில் ஒரு அழகிய பிராம்மண இளை ஞர் தவம் செய்து கொண்டிருப்பதைக் கண்டோம். அவரது தவத்தைக் கலைத்து அவர் மனதை எங்கள் பக்கம் திருப்ப என்னென்னவோ முயற்சிகள் செய்தோம். ஆடினோம். பாடினோம். சாகஸங்கள் புரிந்து சீண்டினோம். அப்போதும் அவரது தவம் கலைய வில்லை. அவரைப் பிடித்து உலுக் கினோம். அவர் கண் திறந்து பார்த்து எங்கள் மீது கோபம் கொண்டு எங் களை முதலைகளாகப் போகும்படி சபித்தார். நாங்கள் பயந்து அவரிடம் சாப விமோசனம் கூறும்படிக் கெஞ் சினோம். அவர் மனமும் இளகியது.



அவரும் ''நீங்கள் நூறு வருடங்களுக்கு முதலைகளாகவே நீரில் இருப்பீர்கள். ஒரு மாவீரன் வந்து உங்களை நீரிலிருந்து கரையில் தூக்கிப் போட்டால் நீங்கள் முன்போல அப்ஸரப் பெண்களாகி விடுவீர்கள்'' என்றார். நாங்கள் வந்து இந்த தீர்த்தங்களில் இருந்து நூறு வருடங்கள் ஆகிவிட்டன.

இதனைக்கேட்ட அர்ஜுனன் மற்ற தீர்த்தங்களிலும் இறங்கி அங்கிருந்து முதலைகளை இழுத்து வந்து கரையில் போட்டான். அம்முதலைகளும் அப்ஸரப் பெண்களாக மாறின. அவர்கள் அர்ஜுனனை வணங்கி விடை பெற்றுக் கொண்டு சென்றனர்.

அங்கிருந்து அர்ஜுனன் மீண்டும் மணிப்புரத்திற்குச் சென்றான், அங்கு சித்திராங்கதையுடன் வாழ்ந்து வரலானான். அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு பப்ரூவாகனன் என்று பெயரிட்டு அதனை சித்திராங்கதையின் தந்தையிடம் அவர்கள் வம்சம் தழைக்கக் கொடுத்தான். அதன்பின் அர்ஜுனன் பிரபாஸ தீர்த்தத்திற்குச் சென்றான்.

அதில் அவன் நீராடி விட்டு அன்றைய இரவுப் பொழுதை ஒரு மரத்தடியே கழித்தான். அப்போது கதன் என்ற யாதவன் அர்ஜுனனைக் கண்டு கிருஷ்ணரின் தங்கையான சுபத்திரையையும் அவளது அழகையும் பற்றி விவரமாகக் கூறினான். அர்ஜுனனும் ஏற்கனவே சுபத்திரையைப் பற்றிக்



கேள்விப்பட்டிருந்தான். இப்போது கதன் வேறு கூறவே அவன் சுபத்திரையைப் காணவும் அவளை மணந்து கொள்ளவும் விரும்பினான்.

துவாரகை பிரபாஸ தீர்த்தத்திற்கு மிக அருகிலேயே இருந்தது. அங்கு போனால் கிருஷ்ணரைக் காணலாம். யாதவர்கள் சாது சன்னியாசிகளைக் கண்டால் பயபக்தியுடன் மரியாதை செய்பவர்கள். எனவே அவன் துவாரகைக்குச் சன்னியாசி வேஷத்தில் செல்லத் தீர்மானித்தான்.

கிருஷ்ணருக்கு அர்ஜுனன் பிரபாஸ தீர்த்தத்திற்கு வந்திருக்கிறான் என்ற செய்தி ஒற்றர்கள் வாயிலாகக் கிடைத்து விட்டது. அவர் பிரபாஸ தீர்த்தத்திற்கு வந்து அர்ஜுனனைக்



கண்டார். அவர் சன்னியாசி வேடத்திலிருந்த அவனைக் கண்டு சிரித்து "என்னப்பா! எதற்கு இந்த வேஷம்?" என்று கேட்டார்.

அர்ஜுனன் தன் மனதிலுள்ளதை மறைக்காமல் கிருஷ்ணரிடம் கூறினான். அவர் அவனை அழைத்துக் கொண்டு போய் அன்றிரவு பேசி அவனது தீர்த்த யாத்திரை பற்றி விசாரித்தார். பிறகு இருவரும் சாப்பிட்டு விட்டு இன்னிசையை ரசித்தனர். மறு நாள் காலையானதும் அவர் அர்ஜுனனை ரைவத பர்வதத்தில் வசதியான ஓரிடத்தில் தங்க வைத்து விட்டுச் சென்றார்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் யாதவர்கள் ரைவத பர்வதத்திற்கு வந்து ஒரு திருவிழா கொண்டாடினார்கள். அதில் கலந்து கொள்ள வசுதேவர், உக்கிரசேனர், அக்ரூரர், பலராமர், கிருஷ்ணர் முதலியவர்களும் தேவகி, ரேவதி, ருக்மினி, சத்தியபாமா, ஜாம்பவதி, சுபத்திரை ஆகியோரும் வந்தனர்.

அப்போது அர்ஜுனன் சுபத்திரையைப் பார்த்து அகமகிழ்ந்தான். திருவிழாவும் முடிந்ததும் யாவரும் துவாரகைக்குத் திரும்பிச் சென்றனர். கிருஷ்ணர் அர்ஜுனனை துவாரகைக்கு வர அனுமதிக்கவே அவன் அங்குள்ள ஒரு நந்தவனத்தில் தங்கினான். அங்கு சன்னியாசியாக வேடம் பூண்டிருந்த அர்ஜுனனை உண்மையான சன்னியாசி என நினைத்து பலராமனும் மற்ற யாதவப் பிரமுகர்களும் அவனை தரிசிக்க வந்தனர். அவனிடம் எல்லோரும் அவன் எந்தெந்தப் புனிதத்தலங்களுக்கெல்லாம் போய் வந்தான் என்று விசாரித்தனர்.

அர்ஜுனன் பல புனிதத் தலங்களைப் பற்றிக் கூறித் தான் சாதுர்மாஸ்ய விரதத்தை அங்கு மேற்கொண்டு இருக்கப் போவதாகக் கூறினான். ஆடி முதல் ஐப்பசி வரை இந்த சாதுர்மாஸ்யம் என்று நான்கு மாதங்களை சன்னியாசிகள் ஒரே இடத்தில் இருந்து பூஜைகளைச் செய்வார்கள்.

இதைக் கேட்ட பலராமர் மகிழ்ந்து கிருஷ்ணரிடம் "இந்த சன்னியாசியை நாம் அழைத்துப் போய் நம் சுபத்தி



ரையை இவருக்குப் பணிவிடை செய்ய வைக்கலாம் என நினைக்கிறேன்'' என்றார். கிருஷ்ணரோ ''இந்த சன்னியாசி பார்க்க அழகாக இருக்கிறார். சுபத்திரையும் அழகானவள். எனவே இதுபற்றி நன்கு யோசிக்க வேண்டும்'' என்றார்.

பலராமரோ ''இப்படி எல்லோரையும் சந்தேகிக்கக் கூடாது. இந்த சன்னியாசிக்கு சுபத்திரை பணிவிடை செய்வதில் எவ்விதத் தவறும் இல்லை'' என்றார். கிருஷ்ணரும் அதை வேண்டா வெறுப்பாக ஒப்புக் கொள்பவர் போல ''சரி. உங்கள் இஷ்டம்'' என்றார். அர்ஜுன சன்னியாசிக்கு சுபத்திரை இருக்கும் இடத்தருகே தங்க வசதி செய்தும் கொடுக்கப்பட்டது.

கிருஷ்ணர் ருக்மிணியிடமும் சத்தியபாமாவிடமும் மட்டும் அர்ஜுனன் மனதில் உள்ளதைக் கூறினார். சுபத்திரையிடம் அர்ஜுனனை நன்கு கவனித்து ஒரு குறையும் இல்லாது பார்த்துக் கொண்டு பணிவிடை செய்து வரும்படிக் கூறினார். கிருஷ்ணர் இவ்வாறு கூறியபின் சுபத்திரை அந்த சன்னியாசிக்கு முழு ஈடுபாட்டுடன் பணிவிடை செய்து வரலானாள். அர்ஜுனனோ சுபத்திரையை பார்த்துக் கொண்டிருந்து இந்திரப் பிரஸ்தத்திற்குத் திரும்பிச் செல்வதைக் கூட மறந்து விட்டான்.

சுபத்திரையும் அந்த சன்னியாசியிடம் மிகுந்த ஈடுபாடு கொண்டாள். அவளிடம் கதன் முன்பே அர்ஜுனனைப் பற்றிக் கூறி இருந்தான். அர்ஜுனனின் அழகையும் வீரத்தையும் வில் வித்தையில் அவனுக்கு நிகர் யாருமில்லை என்பதையும் அவன் சுபத்திரைக்கு விவரமாகக் கூறி இருந்ததால் அவள் மனம் அர்ஜுனன் மீது சென்றது. எனவே அவள் அர்ஜுனனைப் பற்றி அவ்வப்போது விசாரித்து அறிந்து கொண்டு வந்தாள்.

ஒருநாள் வேறு யாருமில்லாத போது சுபத்திரை அந்த சன்னியாசியிடம் ''தாங்கள் எங்கெல்லாம் சென்று வந்தீர்கள்? நீங்கள் இந்திரப் பிரஸ்தத்திற்கு போயிருக்கிறீர்களா? அங்கு குந்திதேவியையும் தருமபுத்திரரையும் பார்த்தீர்களா? வீராதி

வீரரும் அழகிய இளைஞருமான அர்ஜுனனைப் பார்த்தது உண்டா?'' என்று கேட்டாள்.

அதற்கு அந்த சன்னியாசி ''இந்திரப் பிரஸ்தத்தில் குந்திதேவியும் பாண்டவர்களும் துரௌபதியும் நலமே. அவர்களுக்கெல்லாம் தெரியாமல் அர்ஜுனன் துவாரகையில் இப்போது சன்னியாசி வேஷத்தில் சுபத்திரையின் முன்னால்தான் இருக்கிறான். நான்தான் அர்ஜுனன். உனக்கு என் மீது எவ்வளவு ஆசை உள்ளதோ அதைவிட அதிகமாக எனக்கு உன் மீது உள்ளது. ஒரு நல்ல நாளில் உன்னை மணந்து கொள்கிறேன்'' என்றான். சுபத்திரை வெட்கத்தோடு தலைகுனிந்து நின்றாள்.

அவர்கள் இருவரது மனநிலையை அறிந்த கிருஷ்ணர் அந்த சன்னியாசிக்குப் பணிவிடை புரிய ருக்மிணியை அனுப்பினார். சன்னியாசிதான் அர்ஜுனன் எனத் தெரிந்தது முதல் சுபத்திரைக்கு உறக்கம் வரவில்லை.

தேவகி தன் மகள் படும் அவஸ்தையைக் கண்டு ''ஏன் இப்படி கவலைப் படுகிறாய்? உன் விஷயம் பற்றி நாங்களெல்லாம் பேசி சட்டென முடிவுக்கு வருகிறோம்'' என்றாள். சுபத்திரையைப் பற்றி பலராமர் ஒருவரைத் தவிர அரண்மனையிலுள்ள மற்றவர்கள் யாவருக்கும் தெரிந்தது. கிருஷ்ணர் பலராமனுக்குத் தெரியாமல் சுபத்திரையை அர்ஜுனனுக்குப் பத்து நாட்களில் ஒரு முகூர்த்தம் பார்த்துத் திருமணம் செய்து வைக்க ஏற்பாடுகளைச் செய்யலானார். அதற்காக அந்தர்தீபத்தில் திருவிழா என்று அவர் பறை சாற்றுவித்தார்.

அத்திருவிழாவிற்கு துவாரகையிலிருந்து அந்தர் தீபத்திற்கு எல்லோரும் சென்றார்கள். அர்ஜுனன் போகவில்லை. சுபத்திரை சன்னியாசிக்குப் பணிவிடை செய்ய வேண்டுமென துவாரகையிலேயே இருக்க செய்து விட்டார்கள். இதுகண்டு கிருஷ்ணர் சிரித்தவாறே தானும் திருவிழாவில் கலந்து கொள்ள அந்தர் தீபத்திற்குச் சென்றார்.



# அம்புலிமாமா செய்திகள்

## நாற்பத்தாறு ஆண்டுகள்!

நாம் வசிக்கும் பூமியின் வயது 46 ஆண்டுகள் என்று உலகப் புகழ்பெற்ற புவிஇயல் நிபுணர் அன்வர் பாஸில் கூறுகிறார். இதென்ன பிதற்றல் என்றுதானே நினைக்கிறீர்கள்? பூமி



உருவாகி 4600 மில்லியன் ஆண்டுகளாகின்றன என அறிஞர்கள் கூறுகிறார்கள். பாஸில் இதனைக் குறுக்கி 46 ஆண்டுகள் எனக் குறிப்பிடுகிறார். இவரது கணக்குப்படி நாம் பூமியைப் பற்றி அறிந்தது அதன் நான்கு ஆண்டுகள் வரலாறே. ராட்சஸப் பல்லிகள் ஓராண்டிற்கு முன்புதான் இருந்தன. ஒரு வாரத்திற்கு முன்தான் பூமி பனியுகத்திலிருந்து விடுபட்டது. நான்கு மணி நேரமாகத்தான் மனித நடமாட்டம் பூமியில் உள்ளது. விவசாயம் ஆரம்பமாகி ஒரு மணி நேரமே ஆகிறது. தொழில்புரட்சி நடந்து ஒரு நிமிடமே ஆகிறது. ஒரு விநாடிக்கு 500 உயிரினங்கள் அழிந்து போகின்றன. இவ்வாறு அவர் தன் கணக்கின்படி சொற்பொழிவை பெங்களூரில் நடந்த கூட்டத்தில் கூறினார்!

## மீண்டும் பள்ளியில்!

கல்வியை வாழ்நாள் முழுவதும் கற்றுக் கொண்டே இருக்கலாம். இதற்காக மீண்டும் பள்ளிக்கூடத்தில் சேர வேண்டும் என்று பொருளில்லை. ஆனால் பிரேஸில் நாட்டைச் சேர்ந்த சில பிரமுகர்கள் உண்மையிலேயே பள்ளிக்குப் போக வேண்டியதாயிற்று. இவர்கள் அந்நாட்டு சட்டமன்ற உறுப்பினர்களும் மேயர்களும் நகர உறுப்பினர்களுமாக மொத்தம் 180 பேர்கள். இந்த அரசியல் வாதிகளுக்கு போதிய அனுபவம் இல்லாததால் இந்த மன்றங்களில் சிறப்புப் பயிற்சி அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. நம் நாட்டிலும் புதிதாக வரும் லோக் சபை, ராஜ்ய சபை உறுப்பினர்களுக்குப் பயிற்சி அளிக்கப் பட்டு வருவதும் உங்களுக்கு தெரிந்திருக் கலாம்.

## ஆசிரியராக மாறிய மாணவன்

அமெரிக்க விமானப் படையைச் சேர்ந்த கேப்டன் ஸ்காட் ஓக்ரேடி 1991ல் அமெரிக்க விமானப் படை பயிற்சிப் பள்ளியில் மாணவராகச் சேர்ந்தவர். இரண்டு ஆண்டுகளுக்கு முன் அமைதி காக்கும் படையில் அவர் போஸ்னியாவுக்குச் சென்றார். அவர் ஓட்டிய விமானத்தை எதிரிகள் சுட்டு கீழே வீழ்த்தினார்கள். முன்பின் அறியாத சூழ்நிலையில் அவர் பல கஷ்டங்களைச் சமாளித்து உயிர் தப்பி பத்திரமான இடத்திற்கு வந்து சேர்ந்தார். அவர் செய்த முயற்சிகளையும், கையாண்ட முறைகளையும் அறிய அவரிடம் 150 ஆசிரியர்கள் சேர்ந்தனர். அவர்களில் அவருக்கு விமானப் பயிற்சிப் பள்ளியில் போதித்த ஆசிரியர்களும் இருந்தனர். இவ்விதம் அவர் தம் ஆசிரியர்களுக்கே ஆசிரியராக ஆனார்.

அம்புலிமாமா
அனுபந்தம்—85

நம் தேச மரங்கள்:

# வெள்ளை இலை மரம்

இதனைச் சிலர் நாகவல்லி மரம் என்றும் கூறுகிறார்கள். மகாவிஷ்ணுவுக்கு மிகவும் பிடித்தமான வெள்ளை நிறம் இதன் மலரில் உள்ளது. தாவர இயலில் இதன் பெயர் முஸ்ஸிண்டாப்ராண்டோஸா என்பதாம். கிருஷ்ணர் சிறு வயதில் விளையாடித் திரிந்த பகுதி எனக் கூறப்படும் மதுராவுக்கும் பரத்பூருக்கும் இடையே உள்ள நிலப்பரப்பில் இந்த மரங்கள் ஏராளமாக உள்ளன. மேற்கு வங்காளத்தில் டார்ஜிலிங் பகுதியிலும் மேற்குத் தொடர்ச்சி மலையின் நீலகிரி மலைப் பகுதியிலும் இம் மரங்கள் நிறையக் காணப் படுகின்றன.

ஆறு மீட்டர் உயரமே வளரும் இந்த மரத்தின் இலைகள் அடர் பச்சை நிறத்தில் இருக்கும். பச்சை இளைகளுக்கிடையே வெள்ளை நிற இலையும் தென்படும். இது பெரிதாய் நன்கு வளர்ந்து மலரைக் காக்கும் இதழ்களில் ஒன்றுதான்.

இலைகள் ஜோடி ஜோடியாய் ஒன்றுக்கு மற்றது எதிர் எதிராக இருக்கும். 12 செ.மீ. நீளத்தில் முட்டை வடிவில் நடு நரம்பு தடித்து இருபுறமும் நன்கு தெரியும். இலையின் மேல் பாகம் அடர் பச்சையாகவும் பின் பாகம் இளம் பச்சை நிறத்திலும் இருக்கும்.

மலரின் உட்பகுதி ஆரஞ்சு நிறத்திலும் வெளிப்புறம் ஊதா நிறத்திலும் இருக்கும். மலரின் கோசம் ஒன்று விரிந்து இலையாகிப் பெரிதாக வளரும். இந்த மலர்களை மாலை யாகக் கட்டி திருவிழா நாட்களில் அலங்கரிக் கிறார்கள்.

இதன் காய் முட்டை வடிவில் பச்சை நிறத்தில் இருக்கும். பழுத்தால் கருப்பாகி விடும். இம்மரத்தின் இலையிலிருந்து வேர் வரை எல்லாப் பகுதிகளும் மருந்துகளில் உபயோகப்படுத்தப்படுகின்றன.



# துர்வாசர்

திரிபுர அசுரர்களைக் கொல்ல பரம சிவன் ஒரு அம்பை சிருஷ்டித்தார். அதை எய்து அந்த அசுரர்களைக் கொன்ற பின் அந்த அம்பு அவரிடமே திரும்பி வந்து விட்டது. அது அவரது மடியில் ஒரு குழந்தை போல வந்து விழுந்தது. அதனால் அதை ஒரு குழந்தையாகவே அவர் ஆக்கி விட்டார். அந்தக் குழந்தைதான் துர்வாசர்.

அம்பு விர்ரெனப் பாய்வது போல துர்வாசர் சட்டெனக் கோபம் கொள்ளும் இயல்பைப் பெற்றார். ஆனால் அக்கோபம் சட்டென மறைந்து விடும். நம் புராணக் கதைகள் பலவற்றில் துர்வாசர் சம்பந்தப் பட்டிருக்கிறார். இவற்றில் சகுந்தலையின் கதை எல்லோருக்கும் தெரிந்தது. கண்வ முனிவரின் ஆசிரமத்திலிருந்த சகுந் தலையை துஷ்யந்த மன்னன் காந்தர்வ விவாகம் செய்து கொண்டு பிறகு வந்து தலைநகருக்கு அழைத்துப் போவதாகக் கூறிவிட்டுப் போனான். அவன் நினைவிலேயே ஆசிரமத்தில் சகுந்தலை இருக்கையில் அங்கு துர்வாசர் வந்தார். தம்மை உபசரிக்காமல் மெய்மறந்து துஷ்யந்தன் நினைவில் இருந்த சகுந்தலையை அவர் அவள் நினைக்கும் துஷ்யந்தன் அவளை மறந்து விடட்டும் என்று சபித்தார். சகுந்தலையின் தோழிகள் வேண்டியதன் பின் அவர் கோபம் தணிந்து சாப விமோசனம் கூறினார். அதன் பின் தலைநகருக்கு சகுந்தலை போக துஷ்யந்தன் முதலில் அவளை ஏற்க மறுத்தான். அவள் பல கஷ்டங்கள் பட்டபின் துஷ்யந்தனும் அவளும் ஒன்று சேர்ந்தனர்.

துர்வாசர் பகவானின் அவதாரமான ஸ்ரீகிருஷ்ணரையும் விட்டு வைக்கவில்லை. அவர் கிருஷ்ணரின் அரண்மனைக்குப் போய் தமக்கு கிருஷ்ணரும் ருக்மிணியும் சேர்ந்து பாயசம் வைத்துக் கொடுக்க வேண்டும் என்றார். அவர்களும் பாயசம் வைத்துக் கொடுக்கவே அவர் அதைக் கிருஷ்ணரை உடலில் பூசிக் கொள்ளச் சொன்னார். கிருஷ்ணரும் பாயசத்தை உடல் முழுவதும் பூசிக் கொள்ளவே துர்வாசர் அவர் பாயசம் பூசிய உடலில் எந்த இடத்தை எந்த ஆயுதம் தாக்கினாலும் இறக்க மாட்டார் என்றார். ஆனால் பாதங்களில் கிருஷ்ணர் பாயசம் பூசிக் கொள்ளாததால் அதில் வேடனின் அம்பு பட்டு இறந்தார்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. முதன் முதலான விண்வெளிப் பயணி யார்?
2. மெக்மோஹன் கோடு என்றால் என்ன?
3. திமிங்கலத்தின் அமைப்பு எப்படி?
4. உலகில் 'வெடிக்கும்' எரிமலைகள் எவ்வளவு?
5. இந்திய விண்வெளி ஆராய்ச்சி நிறுவனம் எப்போது அமைக்கப்பட்டது?
6. கங்காரு ஒரு முறையில் எவ்வளவு தூரம் தாண்டும்?
7. பென்சிலினை யார், எப்போது கண்டுபிடித்தார்?
8. ஜந்தர்மந்தர் என்றால் என்ன? அது எங்கே உள்ளது?
9. சூரியன் தன்னை ஒருமுறை சுற்ற எவ்வளவு நேரமாகும்?
10. பிரம்ம சமாஜத்தை நிறுவியவர் யார்?
11. பாட்மிண்டன் எப்போது முதலில் விளையாடப்பட்டது?
12. கவியரசர் ரவீந்திரருக்கு எந்த நூலுக்காக நோபல் பரிசு கிடைத்தது?
13. கௌதமபுத்தர் 2500 ஆண்டுகளுக்கு முன் தம் மதப் பிரசாரத்தை ஒரு பூங்காவில் தொடங்கினார். அது எங்கே உள்ளது?
14. ஆகாசவாணியின் 'விவித பாரதி' வர்த்தக ஒலிபரப்பு எப்போது ஆரம்பமாயிற்று?
15. உலகிலேயே மிக அதிக எண்ணிக்கைத் தொழிலாளர்கள் உள்ள நிறுவனம் எது?
16. கஸ்தூரிபா காந்தியின் சமாதி எங்கே உள்ளது?
17. கடைசி முகலாய மன்னர் யார்?
18. நம் நாட்டில் முதன் முதலில் தபால் தலை எப்போது வெளியிடப்பட்டது?
19. முதன் முதலாவதாக ஆசிய விளையாட்டுகள் எங்கு நடந்தன? அதில் வெற்றி பெற்ற நாடு எது?

## விடைகள்

1. ஜான் ஹெச் க்ளென்.
2. இந்தியாவுக்கும் திபத்திற்குமிடையே உள்ள கற்பனைக் கோடு.
3. திமிங்கிலம் மிகப் பெரியது. அதன் நீளம் 90 அடி. நிறை 100 டன்.
4. சுமார் 850 எரிமலைகள்.
5. 1969ல்.
6. ஒரே தாண்டில் 7–9 மீட்டர்.
7. பிரிட்டனின் அலெக்சாண்டர் ப்ளெமிங். 1928ல்.
8. டில்லியில் 1724ல் அம்பர் மகாராஜா ஜெயசிங் கட்டிய வான ஆராய்ச்சி நிலையம்.
9. பூமத்திய ரேகைக்கருகே 25 நாட்கள். துருவத்தருகே இருக்கும் போது 33 நாட்கள்.
10. ராஜா ராம்மோகன் ராய்.
11. 1870ல் மேற்கு இங்கிலாந்தின் க்ளொசெஸ்டர்ஷயரிலுள்ள பாட்மிண்டன் கிராமத்தில்.
12. 1913ல் கீதாஞ்சலிக்காக.
13. வாரணாசியருகேயுள்ள சாரநாத்.
14. 1957 அக்டோபர் 3ந் தேதி.
15. இந்திய ரயில்வே. சுமார் 20 லட்சம் பணிபுரிபவர்கள்.
16. புனேயிலுள்ள ஆகாகான் மாளிகை வளாகத்தில்.
17. பகாதுர் ஷா ஜாபர்.
18. 1852ல்.
19. 1951ல் டில்லியில்; ஜப்பான்.



# தோல்வி எப்படிப்பட்டது?

வெகு காலத்திற்கு முன் மருங்காபுரி என்ற ஊரில் மாதவசேனன் என்ற வீரன் இருந்தான். வாட்போரில் அவனுக்கு நிகர் யாருமே இல்லையென அவன் புகழ் பெற்றிருந்தான். அவனிடம் பல வீரர்கள் தோற்றுப் போயும் இருந்தனர்.

அதே ஊரில் விமலன் என்ற இளைஞன் இருந்தான். அவன் வாட்போரில் பயிற்சி பெற்றவனாயினும் அவனால் யாரையும் அதில் தோற்கடிக்க முடியவில்லை. அவனுக்கு எப்போதும் தோல்விதான் கிடைத்து வந்தது. தான் வெற்றி பெற்று மாவீரன் என்று பெயர் அடைந்து விட வேண்டும் என்று எண்ணினான்.

அவன் இதற்கு என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருக்கையில் ஒரு சாது அவனைக் கண்டு ''அப்பனே! எனக்கு வயிறு நிறைய சாப்பாடு போட்டால் உனக்குச் சிக்கலான பிரச்னை ஏதாவது இருந்தால் அதை நான் தீர்த்து வைக்கிறேன்'' என்றார். அப்போது விமலன் ''என் பிரச்னைக்கு வழி கூறுவதாகக் கூறும் நீங்கள் உங்கள் வயிற்றுப் பிரச்னைக்குத் தீர்வுக் காணும் சக்தியைக் கொண்டிருக்கவில்லையா?'' என்று கேலியாகச் சிரித்தவாறே கேட்டான்.

சாதுவும் 'அப்பனே! இனிய பழங்களை அளிக்கும் மரத்திற்கு மனிதன் தானே தண்ணீர் விட்டு வளர்க்கிறான்! மனிதனால் பழங்களைக் காய்த்துத் தர முடியாதே. மரமும் தானே போய் தண்ணீர் எடுத்துப் பாய்ச்சிக் கொள்ள முடியாதே. மனிதர்களில் சிலர் இந்த மாதிரி மரம் போன்றவர்கள். நான் அவ்வகையைச் சேர்ந்தவன்'' என்றார்.

சாதுவின் பேச்சு அவனை மிகவும் கவர்ந்து விட்டது. ஒரு சிறு விஷயத்தை எவ்வளவு எளிதாகக் கூறி

—சிவனார் செல்வன்—

விட்டார் என்று எண்ணி ஆச்சரியப் பட்டான்.

விமலனும் சாதுவுக்கு வயிறு நிறைய சாப்பாடு போட்டு ''நான் வாட்போரில் எவனையும் வெல்லும் சக்தி கொண்டவனாக இருக்க வேண்டும். இதுவே நான் விரும்புவது'' என்றான். சாது உடனே தன் பைக்குள் கையை விட்டு ஒரு மூலிகையை எடுத்து அவனிடம் கொடுத்து ''நீ இதை வாயில் போட்டுமென்று விழுங்கு. உனக்கு நீ விரும்பிய சக்தி கிடைத்துவிடும். இதற்குப் பின் நீ ஒரு மாவீரனை வாட்போரில் ஒருமுறை வென்றுவிட்டால் போதும். அதற்குப் பின் நீ யாரையும் எளிதில் வாட்போரில் வென்று விடலாம்'' என்றார்.

விமலனும் முதலில் மாதவ சேனனைத் தோற்கடிக்க எண்ணினான். அதன் பிறகு யாரையும் வாட்போரில் தோற்கடித்து விடலாம். ஆனால் மாதவசேனனைத் தன்னால் தோற்கடிக்க முடியுமா என்று அவன் சந்தேகப்படலானான். அப்படிப் பட்ட சக்தி சாது கொடுக்கும் மூலிகைக்கு இருக்குமோ அல்லது இருக்காதோ என்று அவன் யோசிக்கலானான்.

சாது அவன் சந்தேகப்படுவதை ஊகித்து ''நீ ஒருமுறை மாதவ சேனனைத் தோற்கடித்து விட்டால் அவனால் மறுமுறை உன்னை வெல்ல முடியாது. எனவே நீ எப்படியாவது முதலில் மாதவசேனனுடன் வாட் போர் புரி. நீ அதில் வென்றாலே இந்த மூலிகை மேற்கொண்டு பலனை அளிக்கும்'' என்றார்.



விமலனும் ''இதை என்னை நம்பச் சொல்கிறீர்களா?'' எனவே சாதுவும் ''எதற்கும் நம்பிக்கைதான் வேண்டும். நீ ஒருமுறை வெற்றி பெற்று விட்டால் உனக்குப் புதிய சக்தி கிடைத்து விடும். அச் சக்தியுடன் மூலிகையின் சக்தியும் சேர்ந்து செயல்படத் தொடங்கும்'' என்று கூறி விட்டுச் சென்றார்.

விமலனும் சாது கொடுத்த மூலிகையை மென்று விழுங்கவே அப்போது அவன் தனக்குப் புதிய சக்தி கிடைத்து விட்டது போல உணர்ந்தான். அவன் ஒரு வீரனின் ஆடைகளை அணிந்து தன் வாளை எடுத்துக்



கொண்டு மாதவசேனனைக் காணச் சென்றான். அப்போது வழியில் ஒரு கிழவன் அவனைப் பார்த்து ''நீ மாதவ சேனனுடன் வாட்போர் புரியவா போகிறாய்? அவனை வெல்லக் கூடியவன் இப்பூவுலகில் இல்லை என்பதை நீ அறியாயா?'' என்று கூறினார்.

விமலனும் ''நான் மட்டும் ஒரு முறை மாதவசேனனை வாட்போரில் தோற்கடித்து விட்டால் பிறகு எனக்கு இணையான வீரன் உலகில் யாருமே இருக்க மாட்டானே'' என்றான். இவ்வாறு உறுதியுடன் கூறியவனை அக் கிழவர் ஆச்சரியத்துடன் பார்த்தார். அவர் அவனைப் பற்றி விவரமாக விசாரித்து ''ஒரு முறையாவது மாதவ சேனனைத் தோற்கடிக்க முடியும் என்றா நினைக்கிறாய்? இது எளிதல்ல. அவனிடமுள்ள குறை என் ஒருவனுக்குத்தான் தெரியும். நீ எனக்கு ஆயிரம் வராகன்கள் கொடுத்தால் அதைக் கூறி நீ அவனுடன் எப்படிப் போர் புரிய வேண்டும் என்றும் சொல்கிறேன். அதன்படி நடந்தால் நீ நிச்சியமாய் மாதவசேனனை வெல்ல முடியும்'' என்றார்.

''நீங்கள் கூறுவது உண்மை இல்லை என்றால் நான் என்ன செய்வது?'' என விமலன் கேட்கவே அவரும் ''அப்போது உனக்கு நீ கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுப்பதோடு மேலும் ஆயிரம் வராகன்களை நான் கொடுக்கிறேன்'' என்றார். அப்போதும் விமலனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. ஆயினும் அக்கிழவரின் உறுதிமொழியை ஒரு பத்திரத்தில் எழுதி வாங்கிக் கொண்டு ஆயிரம் வராகன்களைக் கொடுத்தான்.

கிழவர் எமகாதகர். அவர் மாதவ சேனனின் மன நிலையை அறிந்தவர். மாதவசேனன் எப்படியாவது யாரிடமாவது தோற்று அதன்பின் தன் மன உணர்ச்சி எப்படி இருக்கும் எனக் காண விரும்பினான். அதற்காக தான் ஒரு மாவீரனிடம் தோற்க எண்ணி அவன் கிழவரிடம் பணம் கொடுத்து அத்தகைய வீரனைத் தன்னிடம் அனுப்பும்படிக் கூறினான்.

கிழவரிடம் ஒருவாரம் பயிற்சி பெற்றபின் விமலன் தன்னுடன் வாட் போர்புரியும் படி மாதவசேணனுக்குச்

சவால் விட்டான். பலர் முன்னிலையில் போட்டி நடந்தது. விமலன் உற்சாகத்துடன் தாக்கினான். முடிவில் மாதவசேனன் தோற்றான். மாதவசேனன் தோற்றுப் போவான் என்று யாருமே எதிர்பார்க்கவில்லை. அன்று எல்லோரும் அவன் விமலனிடம் தோற்றுப் போனதை பற்றியே பேசிக்கொண்டிருந்தார்கள். ஒரே நாளில் விமலன் மாவீரன் என்ற பெயர் பெற்று விட்டான். அவனைக் காணவும் பேசவும் மக்கள் கூட்டம் வந்து கொண்டே இருந்தது.

மாதவசேனனிடம் முன்பு தோற்றுப் போனவர்களெல்லாம் மருங்காபுரிக்கு வந்து விமலனைப் பார்த்துவிட்டு ''ஓ! மாதவசேனனின் சக்தி இப்போது குறைந்து போயிற்று'' என்று கூறலாயினர். அவர்களுக்கும் தம் வாழ் நாளில் ஒரு முறையாவது மாதவசேனனைத் தோற்கடிக்க வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. அதனால் அவர்கள் மாதவசேனனைத் தம்மோடு வாட்போர் புரிய வரும்படிச் சவால் விடுத்தார்கள்.

மாதவசேனனோ ''என்னிடம் சவால் விடுவதை விட நீங்கள் அந்த விமலனுடன் வாட்போர் புரிந்து பாருங்கள். நான் உங்களோடு வாட்போர் புரியமாட்டேன்'' என்று கூறி விட்டான். அவர்களும் தம்முடன் வாட்போர்புரிய வருமாறு விமலனுக்குச் சவால் விட்டனர். ஆனால் அவர்கள் யாவரும் விமலனிடம் தோற்றுப்



போயினர். அவர்கள் அவனைப் புகழ்ந்து ''வாட்போரில் மாதவசேனனையே தோற்கடித்த நீதான் மகாவீரன்'' என ஒப்புக் கொண்டார்கள்.

விமலனின் மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இனி மாதவசேனனைப் பற்றி யாருமே கவலைப்பட மாட்டார்களென்றும் தானே மாபெரும் வீரன் என்றும் எண்ணிப் பெருமைப்பட்டான். ஆனாலும் மாதவசேனன் தன்னிடம் தோற்றும் போனது போல வேறு சில வீரர்களிடமும் தோற்றுப் போக வேண்டுமென அவன் விரும்பினான். இதற்கான ஏற்பாட்டைத் தனக்கு உதவிய கிழவர் தான் செய்ய முடியும் என்று எண்ணி அவன் அவரது உதவியை நாடினான்.

கிழவரோ ''மாதவசேனன் அவர்களோடு வாட்போர் புரியமாட்டான். வேண்டுமானால் அவ்வீரர்களை எல்லாம் தோற்கடித்த உன்னுடன் மறுபடியும் போட்டியிடத்தயாராக இருப்பான்'' என்றார். விமலனோ ''என்னுடனா? அவன்தான் என்னிடம் அண்மையில் தானே தோற்றுப் போனான்!'' என்று கர்வத்தோடு கூறினான்.

கிழவரும் ''ஒருமுறைதான் தோற்றால் எப்படி இருக்கும் என்பதைக் காணவே அவன் உன்னிடம் வேண்டுமென்றே தோற்றான். இம்முறை அவனை உன்னால் தோற்கடிக்க முடியாது'' என்றார். ஆனால் விமலனோ ''அதெல்லாம் இல்லை. உண்மையிலேயே அவன் சக்தி குறைந்து விட்டது. நான் மறுபடியும் அவனைத் தோற்கடித்துக் காட்டுகிறேன்'' என்றான் மார்தட்டியவாறே.

கிழவரும் ''அவன் நீ தின்ற மூலிகையை விட சக்தி வாய்ந்த மூலிகையை அவன் மென்று விழுங்கி இருக்கிறான். அவனை யாராலுமே தோற்கடிக்க முடியாது'' என்றார். அதுகேட்டு விமலன் ஆச்சரியப்பட்டு ''ஓ! அப்படியானால் அந்த சாது அவனுக்கும் மூலிகை கொடுத்தாரா?'' என்று கேட்டான்.

கிழவரும் ''இல்லை. நீதான் புதிய சக்தியை அவனுக்குக் கொடுக்கப் போகிறாய். ஏனெனில் அவன் தோல்வி என்பது எப்படிப்பட்டது என்று கண்டு விட்டான். அடிபட்டவன் வீறு கொண்டு எழுவான். அதனால் அவன் மறுபடியும் தோல்வியை விரும்ப மாட்டான்'' என்றார். ஆயினும் விமலன் மீண்டும் மாதவசேனனுக்கு சவால் விடுத்து வாட்போர் புரிந்து தோற்றுப் போனான்.

அப்போது ஏற்பட்ட தோல்வி விமலனைத் தலை தூக்க விடவில்லை. அதனால் தன் சக்தி எவ்வளவு என்பதை அவன் உணர்ந்து கொண்டு மாவீரன் எனப் புகழ் பெற வேண்டும்மென்ற ஆசையை அறவே விட்டு விட்டான்.





# சரியான தீர்ப்புகள்

வெகு காலத்திற்கு முன் காஷ்மீரத்தை கஜசிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் தன் நாட்டில் ஒரு நகரிலுள்ள நீதிபதி சரியான தீர்ப்புகளை வழங்குவதாகப் பலர் புகழ்ந்து கூறுவதைக் கேட்டு அந்த நீதிபதி எப்படி அவ்வாறு தீர்ப்பு கூறுகிறார் என்பதைக் கண்டறியத் தன் குதிரை மீதேறி அந்நகருக்குச் சென்றான். அவன் அப்போது அரசனைப் போல உடை அணிந்திருக்கவில்லை.

மன்னனுக்கு அந்த நீதிபதியின் நீதிமன்றத்திற்குப் போய் அவர் வழக்குகளை எப்படி விசாரித்து சரியான தீர்ப்பைக் கூறுகிறார் என்று காண ஆசை ஏற்பட்டது. அதனால்தான் அவன் அரசனின் உடைகளை அணியாமல் ஒரு சாதாரண மனிதனைப் போல உடையணிந்து தன் குதிரை மீது அமர்ந்து சென்றான்.

மன்னன் அந்நகர எல்லையை அடைந்தபோது அங்கு நின்று கொண்டிருந்த ஒரு நொண்டி "ஐயா தருமதுரையே" எனக் கூறி வணங்கவே, மன்னன் அவனுக்குச் சில காசுகளைப் போட்டான். அப்போதும் அவன் தருமதுரையே என்று கெஞ்சவே மன்னனும் "இன்னமும் என்ன? காசு தான் கொடுத்தேனே" எனவே அந்த நொண்டிப் பிச்சைக்காரனும் "ஐயா! என்னை உங்கள் குதிரை மீது ஏற்றிக் கொண்டு இவ்வூரில் சந்தை கூடும் இடத்தில் போய் விட்டுவிட்டால் அங்கு பிச்சை எடுத்துப் பிழைத்துக் கொள்வேன்" என்றான்.

மன்னனும் அவன் மீது இரக்கப் பட்டு அவனைத் தன் குதிரையில் ஏற்றிக் கொண்டு அவ்வூரில் சந்தை கூடும் இடத்திற்குச் சென்றான். அங்கு மன்னன் ஓரிடத்தில் குதிரையை நிறுத்தி அந்த நொண்டியை இறங்கச் சொன்னான். அப்போது அவன்

—பாபநாசம் சாமா—



மீது இரக்கப்பட்டாய்? நீ தான் இந்த ஊருக்குப் புதியவன் என்று கூறி இந்த சந்தையில் கொண்டு வந்து விடும் படிக் கெஞ்சினாய். நானல்லவா உன் மீது இரக்கப்பட்டு என் குதிரை மீது உன்னை உட்காரவைத்துக் கொண்டு வந்தேன். இனி உன் வேலையைப் பார்த்துக் கொண்டு போ'' என்றான்.

மன்னனோ குதிரை தன்னுடையது என்றான். நொண்டியோ தன்னுடையது எனக் கூறத் தகராறு முற்றியது. அவர்களது சண்டையை வேடிக்கை பார்க்க ஒரு பெரிய கூட்டமே கூடி விட்டது. கூட்டத்திலிருந்த ஒரு பெரியவர் ''ஏனப்பா வீணாகச் சண்டை போடுகிறீர்கள்? இருவரும் ஒரு குதிரையைச் தன்னுடையது தான் என்கிறீர்கள். இதற்குத் தீர்வைக் காண இவ்வூர் நீதிபதியிடம் செல்லுங்கள். அவர்சரியானதீர்ப்பை வழங்குவார்'' என்றார். அதைக் கேட்டு இருவரும் நீதி மன்றத்திற்குப் போய்த் தீர்ப்புக் கேட்க அங்கு சென்றனர். அப்போது அங்கு வேறு சிலரும் தம் வழக்குகளோடு வந்திருந்தனர்.

மன்னனைப் பார்த்து ''நீ முதலில் இறங்கு'' என்றான். மன்னனும் அவன் இறங்கத்தன் உதவியை நாடுகிறான் என நினைத்துக் கீழே இறங்கி ''சரி வா. உன்னை இறக்கி விடுகிறேன்'' என்றான்.

நொண்டியோ ''நான் ஏன் இறங்க வேண்டும்? இது என் குதிரை. இனி நான் போகிறேன்'' என்றான். அப்போது மன்னன் ''என்னப்பா இது? உன் மீது இரக்கப்பட்டு உன்னை என் குதிரை மீது ஏற்றிக் கொண்டு இங்கே விட வந்தால் நீ என் குதிரையையே உன்னுடையது என்கிறாயே'' என்று கேட்டான்.

நொண்டியோ ''பேஷ், பேஷ். கதை நன்றாக இருக்கிறதே. நீயா என்

நீதிபதி வந்து முதல் வழக்கைக் கேட்டார். ஒரு கணக்குப் பிள்ளையும் ஒரு குடியானவனும் ஒரு ஸ்திரீயைத் தம் மனைவி எனக் கூறினர். அவளோ ஊமை. இருவரும் அவளைத் தம் மனைவி என்றதால் நீதிபதி அவளை தன் வீட்டில் விட்டுப் போகும்படியும் மறுநாள் அவ் வழக்கில் தீர்ப்புக் கூறுவதாகக் கூறினார். இருவரும்

அதற்குச் சம்மதித்து அவளை நீதிபதியிடம் விட்டுச் சென்றனர்.

மன்னன் நீதிபதி கூறியது கேட்டு ஆச்சரியப்பட்டான். ஸ்திரீயோ ஊமை. தன் கணவன் யார் என்று வாய் திறந்து கூற முடியாதவள். கணக்குப் பிள்ளையும் விவசாயியும் அவள் தன் மனைவி என்று உரிமை கொண்டாடுகிறார்கள். இந்நிலையில் நீதிபதி அவளை யாருடைய மனைவி என்று சரியான தீர்ப்பு எப்படிக் கூறப் போகிறார் என்பதை மன்னன் காண விரும்பினான்.

அடுத்து ஒரு கசாப்புக் கடைக்காரனுக்கும் ஒரு வாணியனுக்குமான வழக்கு. கசாப்புக் கடைக்காரனின் கையிலுள்ள பணத்தை வாணியன் தனது என்றான். கசாப்புக் கடைக்காரனோ அது தன்னுடையதே என்று கூறினான். நீதிபதியும் பணத்தைத் தன்னிடம் விட்டு வைக்கும் படியும் மறுநாள் அவ்வழக்கிற்குத் தீர்ப்புக் கூறுவதாகவும் சொல்லி அவர்களை அனுப்பினார்.

இந்த வழக்கிலும் இருவர் பணம் தனதே என உரிமை கொண்டாடினார்கள். அதை நிரூபிக்க இருவரிடமும் எந்த சாட்சியமும் இல்லை. எனவே அந்தப் பணம் யாருடையது என முடிவு செய்வது மிகவும் சிக்கலானதே. அதை எவ்வாறு நீதிபதி தீர்த்து வைக்கப் போகிறார் என்பதனையும் மன்னன் காண விரும்பினான்.

அடுத்து மன்னன் கொண்டு வந்த



குதிரை வழக்கு. நீதிபதி மன்னன் கூறியதையும் நொண்டி கூறியதையும் கேட்டுவிட்டு ''இருவருமே குதிரையை உங்களுடையது எனக் கூறுகிறீர்கள். இன்று குதிரையை என்னிடம் விட்டுப் போங்கள். நாளை வாருங்கள். தீர்ப்புக் கூறுகிறேன்'' என்று சொல்லி அவர்களை அனுப்பினார்.

மறுநாள் நீதிபதி அளிக்கும் தீர்ப்பைக் கேட்க வழக்கில் சம்மந்தப்பட்டவர்கள் எல்லோரும் நீதி மன்றத்தில் வந்து கூடினார்கள். நீதிபதி கணக்குப் பிள்ளையைக் கூப்பிட்டு ''இந்த ஸ்திரீ உன் மனைவி தான். அழைத்துப் போ. பொய் சொன்ன விவசாயிக்கு இருபது சவுக்கடிகள் தண்டனை'' என்



றார். கணக்குப் பிள்ளையும் அந்த ஸ்திரீயும் மகிழ்ச்சியுடன் சென்றனர்.

அடுத்து நீதிபதி கசாப்புக் கடைக்காரனை அழைத்து ''இது உன் பணம். எடுத்துக் கொள். வாணியன் பொய் கூறியதற்கு இருபது சவுக்கடிகள் தண்டனை'' என்றார். இருவரும் அந்தத் தீர்ப்பை ஏற்றனர்.

அடுத்து நீதிபதி மன்னனிடம் ''உன் குதிரையை லாயத்தில் இருபது குதிரைகளோடு கட்டி வைத்திருக்கிறேன். நீ மட்டும் இப்போது என்னுடன் வந்து உன் குதிரை எது என்று காட்டு'' எனக்கூறி மன்னனை அழைத்துப் போனார். மன்னன் தன் குதிரையை அடையாளம் காட்டினான். நீதிபதி திரும்பி வந்து நொண்டியை அழைத்து கொண்டு போய் அவன் குதிரையை அடையாளம் காட்டச் சொல்ல அவன் மன்னன் காட்டிய குதிரையையே சுட்டிக்காட்டி அதுவே தனது என்றான்.

நீதிபதி நீதிமன்றத்திற்குத் திரும்பி வந்து குதிரை மன்னனுடையது தான் என்று தீர்ப்பளித்தார். பொய் சொன்ன நொண்டிக்கு இருபது சவுக்கடிகள் தண்டனை கிடைத்தது. நீதிமன்றத்திலிருந்து மற்ற எல்லோரும் சென்று விட்டார்கள். மன்னன் மட்டும் நின்று கொண்டிருந்தான்.

அது கண்டு நீதிபதி ''குதிரை தான் உன்னுடையது என்று தீர்ப்பளித்து விட்டேனே. ஏன் போகாமல் நிற்கிறாய்?'' என்று கேட்டார். மன்னனும் ''உங்கள் தீர்ப்பு சரியானதே. அது பற்றி அறிந்து கொள்ளவே நான் இங்கே இருக்கிறேன். தீர்ப்புக் கூறுவது எளிதல்ல. எனக்குச் சரியான தீர்ப்பு கூறியது போல நீங்கள் மற்றவர்களுக்கும் சரியான தீர்ப்பையே அளித்திருப்பீர்களென்றே நான் நம்புகிறேன். வாய் திறந்து பேச முடியாத பெண்ணிடம் எதுவும் கேட்டறிய முடியாத நிலையில் அவள் தான் கணக்குப் பிள்ளையின் மனைவி என்று தீர்ப்பளித்தீர்கள். ஒரு தடயமும் இல்லாத பணத்தைக் கசாப்புக் கடைக்காரனுடையதே என்று கூறிப் பணத்தை அவனுக்குக் கொடுத்தீர்கள். ஆனால் நீங்கள் எப்படிச் சரியான தீர்ப்பை அளித்தீர்கள் என்பதை

நினைத்துத்தான் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றான்.

நீதிபதியும் ''நீ நினைத்தபடி தீர்ப் பளிப்பது கஷ்டமல்ல. அந்த ஸ்திரீ சம்மந்தமாகப் பார். அவளை என் வீட்டிற்கு அழைத்துப் போய் என் பேனாவைக் கொடுத்து அதை அலம்பி மை போடச் சொன்னேன். அவளுக்கு அந்த வேலை செய்து பழக்கமாதலால் கச்சிதமாகச் செய் தாள். கணக்குப் பிள்ளை வீட்டில் தான் இப்படிச் செய்ய முடியும். சாதா ரண விவசாயியின் மனைவியால் இதைச் செய்ய முடியாது. எனவே அவள் கணக்குப் பிள்ளையின் மனைவிதான் என்று தெரிந்தது'' என்றார்.

அப்போது மன்னன் ''பணம் கசாப் புக்கடைக்காரனது என எப்படிக் கண் டீர்கள்?'' எனவே நீதிபதியும் ''வாணி யன் பணமானால் அவன் தொட்டு எண்ணெய் ஒட்டிக் கொண்டிருக்கும். கசாப்பு கடைக்காரன் பணமானால் அதில் எண்ணெய் ஒட்டிக் கொண்டி ராது. இதனை அறிய ஒரு வழி இருக் கிறது. அப்பணத்தைத் தண்ணீரில் போட்டேன். நீரில் பணத்திலிருந்து எண்ணெய் வந்து மிதக்கவில்லை. அதனால் பணம் கசாப்புக் கடைக்கார னது என்று தெரிந்தது'' என்றார்.

''எங்கள் குதிரை விஷயம்?'' என மன்னன் கேட்டபோது நீதிபதி ''நீங் கள் இருவரும் ஒரே குதிரையை அடை யாளம் காட்டிய போதிலும் அக் குதிரை உங்களைப் பார்த்து என்ன செய்கிறது எனப் பார்த்தேன். அது உன்னைக் கனிவுடன் பார்த்தது. ஆனால் நொண்டியை அது பார்க்கக் கூடவில்லை'' என்றார்.

மன்னன் இவற்றையெல்லாம் கேட்டு மிகவும் மகிழ்ந்து போனான். தலை நகருக்குத் திரும்பியதும் அவன் அந்த நீதிபதியை வரவழைத்து அவ ருக்கு ஒரு ஜாகீரைப் பரிசளித்தான். தான் குதிரை வழக்கில் தீர்ப்பளித்தது மன்னனுக்கே என்று கண்ட நீதிபதி அடைந்த ஆச்சரியத்திற்கு அளவே இல்லை.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 பிப்ரவரி மாத இதழில் வெளியிடப்படும்.



S.G. Shesagiri



S.G. Shesagiri

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ டிசம்பர் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.

---

## அக்டோபர் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : பூத்து உலர்ந்த பூ.
இரண்டாவது போட்டோ : பூத்து மலர்ந்த பூ.
பரிசு பெற்றவர் : என். குமார், தாராவி, பம்பாய்-17.




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

AMBULIMAMA (Tamil) December 1995 Regd. No. M. 4863